# குஞ்சாலாடு

(குறு நாவல்)

ஆசிரியர்:

நையாண்டி பாரதி



சாந்தி நிலையம்

துறையூர் : : திருச்சி

சாந்தி நிலைய வெளியீடு 1.
முதல் பதிப்பு — 1946.
விலை ரூபாய் ஒன்றேகால்.

# சமர்ப்பணம்

எழுத்தில் தனி வேகமும்
சிந்தனையில் புதுமையும் அடைய
எனக்கு, தமது தனிரக இலக்கிய
முயற்சிகள் மூலம், வழி காட்டிய
ஆசிரியர்
**'புதுமைப் பித்தன்'**
அவர்களுக்கு

ஊழியன் அச்சகம், துறையூர்.

# 'குஞ்சாலாடு'

# உருவான கதை



ஆசிரியர்

நையாண்டி பாரதி

ஆர்வமூட்டியவர்

வீ. கலியபெருமாள்

ஆதரவாளர்கள்

அ. வெ. ர. கிருஷ்ணசாமி

தன்னிகரற்ற

தனிப்பெரும் கலைஞர் ஒருவர்

அச்சகம்

ஊழியன் பிரஸ்

பிரசுரம்

சாந்தி நிலையம்

பிரசார பிரம்மா

பிள்ளையார்

# எமது அளப்புகள்

சாந்தி நிலையத்தின் முதல் வெளியீடு இது. தனக்கெனத் தனிப்பாதை கண்டு தீவிரமாக முன்னேறும் ஆசிரியர் கையாண்டி பாரதியின் முதல் நாவலும் கூட.

இந்தச் சுவையான புத்தகத்தைப் படித்து முடிந்ததும் 'இது நாவல் தானு!' என்ற சந்தேகம் எழுந்தாலும் எழலாம் இதைக் குறுநாவல் என்றோ வெறும் கதை எனவோ ஒப்புக் கொள்ள முடியாவிட்டால் 'சுத்த அளப்பு!' என்று தாராளமாக மதிக்கலாம்!

நம்பமுடியாத புரட்டாக இருக்கிறதே என்று யாராவது நினைத்தால், அவர்களுக்கு முன்னெச்சரிக்கையாக இப்பொழுதே கை-பாரதி ஒன்று அறிவித்துவிட விரும்புகிறார். ஆசிரியர் புதுமைப் பித்தனுடன் அவரது 'கடவுளும் கந்தசாமி பிள்ளையும்' கதையை நாடகமாக்குவது பற்றி வல்லிக்கண்ணன் பேசிய போது, 'பொது ஜனங்கள் இதை ரசிக்கவோ நம்பவோ மாட்டார்களே!' என்ற கலைஞர்களின் சந்தேகத்தைக் குறிப்பிட நேர்ந்தது. நண்பர் புதுமைப் பித்தன் ஓங்கியடித்தார் 'இந்த சிவலீலா திருவிளையாடல் புராணமெல்லாம் என்னவாம்? அந்த அபத்தங்களை அவர்கள் நம்பி ரசிக்கும் போது இந்த அளப்புகளை ஏன் ரசிக்கக் கூடாது?' என்று! 'இதுவும் அதே!' தான் 'குஞ்சாலாடு' விஷயத்திலும்,

எங்கள் நீண்டநாள் கனவு நனவாகும்படி உதவிபுரிந்த அன்பர்கள் அனைவருக்கும் எங்கள் நன்றி,

சாந்தி நிலையத்தார்



# நாடகமே உலகம்!

நாடகம் சுவையாக நடந்துகொண்டிருந்தது.

மாலை வேளைகளில் கலாசாலைகளிலிருந்து வெளிவரும் நவயுவதிகளின் பகட்டுக்களைப் போல் ஒளி அலங்காரம் மின்வெட்டி விளையாடிக்கொண்டிருந்தது மேடையிலே.

விறுவிறுப்பான கட்டம். தருமிக்கு தான் எழுதிக் கொடுத்த பாட்டில் குற்றம் உண்டு என்று சொன்ன நக்கீரனுடன் சிவன் சீறிக்கொண்டிருந்தார். ஆத்திரம் கரை புரண்டுபோகவே 'அடே, யாரிடம் பேசுகிறாய் என்று பார்த்துச் சொல்' என்று நெற்றிக் கண்ணை காட்டினார் சிவனார்.

'நெற்றிக் கண் காட்டினும் குற்றம் குற்றமே' என்றான் கீரன்.

தீயை வைத்ததும் சுருசுருவென்று சதிராடும் வெடியின் திரியைப் போல படபடத்து நின்ற சிவனார் நெருப்பு வெடிமருந்திலே பட்டதும் 'டப்டிப்'பென்று குதிக்கும் சீனாச்சரம் போல் குதித்து 'என்ன சொன்னாய்?' என்று உறுமினார். 'டப்'பென்ற ஓசை.

மேடையிலே இருள் பரவியது. பின் ஒரு ஒளி வெட்டு. அங்கே ஆதியாய், அநாதியாய், அடிமுடி காணும்படி பேருருவாய் அட்டையாய் வளர்ந்து நின்ற சிவனின் நெற்றிக் கண்ணிலிருந்து மத்தாப்புப் பொறி பறந்தது.

இந்த அற்புதமான கட்டத்தை உணர்ச்சிப் பரவசத்துடன் மக்கள் கண்டு களித்திருக்கும்போது முதல் சீட்டில் பரபரப்பு ஏற்பட்டது. அனல் ஓடும் மூச்சுவிட்டு இது வரை நாடகத்தை கவனித்து வந்த ஒரு பெரியவருக்கு

மேலும் சகித்துக்கொண்டிருக்க முடியவில்லை. அடுப்பில் காயும் தோசைக்கல்மீது பட்ட குளிர்ந்த நீரைப் போல துருதுருத்த அவர் 'அக்ரமம்' என்று துள்ளி எழுந்தார்.

'ஐயோ, தயவுசெய்து மௌனமாயிருங்கள். அல்லது வெளியே போய்விடலாம்' என்று மன்றாடினான் அவர் அருகில் இருந்தவன்.

'சரி' என்ற உறுமலுடன் பூமி அதிர நடந்தார் அந்த தாடிக்காரர். பின் சென்றான் மற்றவன்.

'சே! பூராவையும் பார்க்கவிடாமல்! என்ன வேண்டிக் கிடக்கு ஆத்திரம்' என்று அலுத்துக்கொண்டு எழுந்தார் ஆடம்பரமாக ஆடை அணிந்திருந்த ஒருவர். 'ஊம் நமக்கு மட்டும் இங்கு என்ன வேலை? நட' என்று அருகிலிருந்த வேறோர் ஆசாமியையும் அழைத்துக்கொண்டு வெளியேறினார் அவர்.

இவ்வளவும் இருள் குறைந்து ஒளி வியாபிப்பதற்கு முன்னரே நடந்துவிட்டது. கழுத்து வலி எடுக்கும்படியாக நீட்டியும் நெளித்தும் பார்த்துக் கொண்டிருந்தவர்கள் பார்வையை மறைக்கும்படி நடந்த அவர்களைக் கண்டு முணங்கினார்கள் ரசிகர்கள். அதைப்பற்றி அவர்களுக்கு என்ன!

வெளியே நல்ல நிலவு. நால்வரும் நடுத்தெருவில் வந்து நின்றனர். கோபமாக வெளியேறியவரின் போக்கு வெறிய னுடையதைப் போலிருந்தது. அவரது தாடியும் மீசையும் கண்களில் மின்னிய அசாதாரண ஒளியும் பார்க்க அச்சம் தருவனவாகவே விளங்கின. கடுகடுத்த அவர் முகம் எளி தில் சீற்றமுறும் அவர் பண்பைக் காட்டியது. நிலவொளி அவர் முகத்திலே படும்போது நெற்றி நடுவில் ஓர் வடுவை யும், கழுத்திலே பெருங் கறையையும் புலப்படுத்தும் - கவ னித்து நோக்கினால்.

அலங்கார ஆடை அணிந்தவர் உல்லாசச் சீமான் போல் தோற்றமளித்தார். அவர் சிரிக்கும்போது குறும் புத்தனந்தான் நெளிந்தது உதடுகளிலும், கண்களிலும்! அவர் கூட வந்தவர் சாதுவான பேர்வழி.

இன்னுமொரு ஆசாமியோ? மற்றவர்களைச் சூழ்ந்திருந்த அசாதாரண பாவம் ஏதுமற்ற சாதாரண ஜந்து. அவன் கேட்டான்: 'என்ன ஸ்வாமி? உங்களையே மறந்து போய் காரியத்தைக் கெடுத்து விடத் தெரிந்தீர்களே!'

'இவர் நெற்றியைத் தடவியதைப் பார்த்தால், எங்கே இவரும் கண்ணைக் காட்டிவிடப் போகிறாரோ என்று பயந்தேன்' என்று குறும்பாக மொழிந்தார் அலங்காரப் பிரியர்.

'என் கோபம் இன்னும் தணியவில்லை.'

'கோபப்படுவதற்கு இதில் என்ன இருக்கிறது?'

'என்னையே அவமானப்படுத்துவதுபோலல்லவா இருக்கிறது! வாதாடித் தோல்வி பெறப்போகிறேன் என்று பயந்து தீக்கண்ணைக் காட்டி மிரட்டி...'

'பின் நீர் செய்ததுதான் என்னவோ!' என்றார் பட்டுடைக்காரர், ஏகத்தாளமாக.

'ஓய், உமது லீலா மகத்துவங்களின் வண்டவாளங்கள் எனக்கும் தெரியுங்காணும்' என்று மிரட்டினார் சிவன்.

கூடவந்திருந்த பிரம்மா தலையைச் சொரிந்துகொண்டு நின்றார். என்ன செய்வது அல்லது சொல்வது என்று புரியவில்லை அவருக்கு. ஆபீஸ், பைல்கட்டு, வேலை இவை தவிர வெளி உலகம் அறியாத தாலூகா ஆபீஸ் குமாஸ்தா போல படைத்தல் தொழிலிலேயே உழல்பவர் அவர். பாபம், என்ன கண்டார்!

இவ்வளவு கூத்துக்கும் காரணமான மனித ஜந்து பைத்தியம் போல் சிரித்தது! 'நன்றாக இருக்கிறது, கடவுளே, நன்றாயிருக்கிறது! இன்னும் கொஞ்ச நேரத்தில் நாடகக் கொட்டகையே காலியாகி கும்பல் இங்கே கூடிவிடும்! சுற்றுப்புறங்களை கவனித்து நடந்துகொள்ளுங்கள், ஸ்வாமி' என்றான் அவன்.

சிவன் வெகுண்டார். 'என்ன கவனிப்பது! நான் நெற்றிக்கண்ணால்.........'

'ஒன்றும் செய்துவிட முடியாது!' என்றான் மனிதன்.

'ஒன்றும் செய்ய முடியாதா?' சிவனுக்கு கோபம் மீசையையும் தாடியையும் துடி துடிக்கச் செய்தது.

ஆனால் அந்த ஆசாமி புன்னகையுடன் சொன்னான்: 'ஆமாம். ஒன்றும் செய்யமுடியாது. நீங்களே சிகரெட் பிடிக்க வேண்டுமென்று விரும்பினால், அதைப்பற்ற வைக்கக்கூட உபயோகப்படாது ஸ்வாமி!' என்று,

'மனிதவர்க்கம் எங்களை இவ்வளவு கேவலமாகவா மதித்துவிட்டது!' என்று பெருமூச்செறிந்தார் சிவன். விஷ்ணு குறுக்கிட்டு 'எங்களை என்பானேன்? உம்மை மட்டும் என்று குறிப்பிடும்' என்று 'பாகிஸ்தான்' பண்ணப் பார்த்தார்.

அந்த மனிதனோ 'எல்லோரும் ஓர் இனம். எல்லோரும் ஓர் குலம். எல்லோரும் ஓர் நிறை தான் ஸ்வாமி!' என்றான். 'நீங்களே எல்லாவற்றையும் கண்டுவிட்டுச் சொல்வீர்கள்!'

'அதற்காகத் தான் வந்தாயிற்றே. இனி எங்கே போக வேண்டும்?' என்று உறுமினார் சிவன்.

'தங்கள் சித்தம். என் பாக்கியம்' என்றான் அவன்.

'விளையாடாதே. செய்யவேண்டியவற்றுக்கு திட்டமிடுவது உன் பொறுப்பு' என்றார் கடவுள்.

'அப்படியென்றால் இப்பொழுது காப்பி சாப்பிடப் போகவேண்டும்.'

'காப்பியா! அதென்ன?'

'உங்கள் தேவலோகத்தில் சர்வசாதாரணமாக வழங்கப்படும் ஸோமரசம் போல ஒரு பானம்' என்று மனிதன் விளக்கினான்.

'அதை ருசிக்கும் நிலையில் என் மனமில்லை' என்று சிவன் கூறினர். விஷ்ணு வேண்டுமா, வேண்டாமா என்று யோசித்துக்கொண்டிருந்தார்.

'யோசனை வேண்டாம், ஸ்வாமி. அதைப்பருகிய வுடனேயே புதிய தெம்பு பிறந்துவிடும். மனச்சோர்வு பறந்துவிடும். காப்பி சாப்பிட்ட பிறகு தான் அடுத்த காரியத்தைப் பற்றி என்னுல் யோசிக்க முடியும்' என்று சொல்லி நடக்க ஆரம்பித்தான் மனிதன்.

மூவரும் அவனைப் பின் தொடர்ந்தனர். மேஜைமுன் அமர்ந்ததும் 'சாப்பிட வேறு ஏதாவது?' என்று இழுத் தான் அவன்.

'அதெல்லாம் ஒன்றும் வேண்டாம். வேண்டுமானுல், இதோ கை நீட்டினுல் எவ்வளவோ வந்து விழும்' என்றுர் விஷ்ணு.

'கை நீட்டும் பழக்கம் நல்லதில்லையே! அதை கோகுலத் தில்—கிருஷ்ண லீலையுடன்-விட்டுவிடவில்லையா நீங்கள்!' என்று சிரித்தான் மனிதன்.

சிவன் 'என்ன இருந்தாலும் தொட்டிற்பழக்கமல்லவா! அது போகுமா!' என்று நகையாடவே, விஷ்ணு 'நிறுத்தும் நான் சொன்னது வேறு. நினைத்தால் தேவான்னங்கள் கைக்கு வந்து சேரும் என்றேன்' என விளக்கினுர்.

மனிதன் கும்பிட்டான். 'ஸ்வாமி அதுமாதிரி லீலா விநோதம் எல்லாம் இப்பொழுது வேண்டாம். உங்கள் மூவருக்குமே சொல்கிறேன். அந்தச்சித்துவிளையாடல்களைக் கொஞ்சம் மறந்து......'

'நீ ஆட்டுகிறபடி விளையாடத்தானே வேஷம் போட்டுக்கொண்டு மனிதர்கள் மாதிரி நீ இழுத்த இழுப் புக்கெல்லாம் அலைகிறேம்' என்று விஷ்ணு சிரித்தார்.

'உங்கள் கை வரிசைகளைப் பார்த்து மகிழ்வதற்குத் தானே!' என்றுன் அவன்.

கடவுளர் சிரித்தனர்—'நீ கைகாரன் தான்! எமனுக்கு கடுக்காய் கொடுத்துவிட்டு இவ்வளவு பேச்சும் பேசு கிறாயே! எமன் ஏமாறாமல் இருந்தால்......'

'அது வேறு விஷயம்!' என்று கூறி நகைத்தான் அவன்.



# 2

## களிமண்

'என்ன தேடுகிறீர்கள் ஸ்வாமி?'

'களிமண்'

'அதற்குள் மேல்மாடி காலியாகி விட்டதா!'

அப்பொழுது தான் தலைநிமிர்ந்து பார்த்தார் அவர். அப்படிப் பேசியவர் யார் என்று நிர்ணயிக்கும் முன்னரே அவர் வாய் முனகியது: 'புரியவில்லையே!'

'அது தான் சொன்னேனே!'

'என்ன?'

'மேல் மாடி காலி என்று'

'அப்படியென்றால்?'

'ஹூம், நாலு தலைகளில் ஒன்றில் கூடவா மூளை இல்லாமல் தட்டுப்பாடு ஏற்படவேண்டும்! பாபம்' என்று அனுதாபப்பட்டான் அங்கு தலைகாட்டிய பேர்வழி.

'களிமண் எங்கே, இங்கு வைத்துவிட்டுப் போயிருந்தேனே, என்று கேட்டால் என்னவோ உளறுகிறாயே நீ யார்?' என்று அதட்டலாகக் கேட்டார் நான்முகன்.

'நான் யார் என்கிற கேள்விக்கு வேதாந்த விற்பன்னர்கள் கூட இன்னும் விடைகாணவில்லையாம் ஸ்வாமி!'

'சட் அதிகப்பிரசங்கி!'

'அது கிடக்கிறது, களிமண் ஏன் ஸ்வாமி?' என்று வம்புக்கிழுத்தான் அழையா விருந்தாய் நுழைந்திருந்த அதிதி.

'நீ யார்?'

'நான் பூலோகவாசி'

'முட்டாள்! உன்னைப் போல முட்டாள்களை உருவாக்க உதவும் மண் அது. நீ எங்கு வந்தாய்?'

பூலோகம் அலுப்புத்தட்டவே இப்படி இந்தப் பிராந்தியத்திலே சுற்றிவரலாம் என்று வந்தேன். அது சரி, களி மண்ணை இல்லாத இடத்தில் தேடினால்?' என்று கேட்டான் புதிதாக வந்தவன்.

'ரொம்பக் கண்டவன் போல் பேசுகிறாயே!'

'அது உங்கள் தலையில் இருப்பதாக நம்பத்தகுந்த வட்டாரத்தில் பிரஸ்தாபிக்கப்படுகிறது. இது ஊர்ஜிதமாகாத செய்தி தான்!' இப்படிச் சொல் உதிர்த்துவிட்டு குறும்பாகச் சிரித்தான் அவன்.

பிரம்மதேவனின் நான்கு ஜோடிக்கண்களும் கோபத்தால் சிவந்தன. 'மனிதப்பதரே, யாரென்று தெரியாமல் ......' என்று கர்ஜிக்கத் தொடங்கினார்.

'நான் பூடம் தெரியாமல் சாமியாடவில்லை, ஸ்வாமி! உங்களிடம் ரொம்ப விஷயங்கள் அறிவிக்கவேண்டியிருப்பதால், பேட்டி காண வந்தேன்.'

'நீ மிகவும் தலைக்கனம் படைத்தவன்போலும்!' என்று தலையசைத்தார் சிருஷ்டிகர்த்தா.

'ஒரு தலை உடைய எனக்கு என்ன தலைக்கனம் வந்து விடப்போகிறது!'

'வம்பளக்க வேண்டாம். சொல்வதைச் சொல்லிவிட்டு விரைவில் நட. படைப்புத் தொழில் தடைப்படுகிறது என்று அவசரப்படுத்தினார் அவர்.

'அப்படியே, ஸ்வாமி. மண்ணுலகிலே உயிர்கள் பெருகுவதற்காக மண்ணைப்பிசைந்து மூச்சு அடைத்து தலையில் எழுதி விதிப்படி ஆட்டிவைப்பது தாங்கள் தானே? தங்

களுக்கு ஒரு விண்ணப்பம். தாங்கள் கண்ணை மூடிக் கொண்டு சிருஷ்டிக்கிறீர்களே! அந்த ஜந்துக்களின் தன்மை என்ன என்று பார்க்கவாவது கண்ணைத் திறந்ததுண்டா?'

'கண்ணைத் திறக்க வேண்டிய அவசியம் என்ன நேர்ந்தது?' என்ற ஆங்காரக் குரல் ஒன்று அதிர்ந்தது அருகே. இருவரும் திடுக்கிட்டுத் திரும்பினர். சிவன் நின்றார் பிரம்மா அவசர அவசரமாக 'நமஸ்தே' என்றார், பூலோக வாசி அவரை ஆச்சரியமாக நோக்கியபடியே கரம் குவித்தான்.

'பிரம்ம, உன் பட்டறையிலிருந்த களிமண்ணை நம் தேவி சிற்றில் கட்டி விளையாட உதவும் என எண்ணி நம் குமரன் எடுத்து வந்து விட்டானும். சிறு பருவக் குறும்பு! அவன் என்ன கண்டான் சிருஷ்டியின் கதையை என்று திருவாய்மலர்ந்தருளிய விரிசடைக் கடவுள் கை நீட்டினார். நான்முகனின் பட்டறையில் களிமண் வந்து விழுந்தது.

'சரிதான்!' என்று தலையாட்டினான் அதிதி.

'என்ன சரிதான்?' என்று சீற்றத்துடன் திரும்பினார் சிவன். புதிதாக யாரோ நிற்பதைக் கண்டு 'யார் நீ; எங்குற்றாய்?' என வெகுண்டார்.

'இங்குதான்! சரிதான் என்றேனே அந்த விஷயம் என்னவென்றால், சிருஷ்டிசக்தி இப்படி செப்பிடுவித்தை போல கையாளப்படுவதனால் தான்.........'

'நிறுத்து. நிலை தவறிப் பேசும் நீ யார்?' என்று சீறினார் கடவுள். அவர் தோளில் வளைந்து நெளிந்த நாகமும் சீற்றக்குறி காட்டியது.

'தேவதேவா, தங்கள் அகண்ட சிருஷ்டியின் ஓர் அணு நான்.'

'மானிடப் பதருக்கு இங்கு என்ன வேலை?' என்று நெருங்கினார் சிவன்.

அவன் ஒதுங்கிப் போய் நின்று சொன்னான்: 'தண்ணீர் தூவானமாக என் மேல் பட்டால் எனக்கு ஜல தோஷம் வந்துவிடும். அது நிற்க. ஒரு மங்கையின் எச்சில் என் மீது தெறிப்பதை நான் விரும்புவதில்லை.'

'என்ன சொன்னாய்?' என வெகுண்டார் நீலகண்டர்.

'கங்கை உமிழ் நீரைப் பற்றி......'

'யாரடா நீ?'

அவன் பவ்வியமாகவே சொன்னான்: 'தங்களுக்கெல்லாம் ஞானக்கண் உண்டு என்று எங்கள் ஏடுகள் சொல்வது உண்டு. அது தவறு என்பதை விஷயம் அறிந்த வட்டாரம் ஊகிக்காமல் இல்லை. அது இப்பொழுது தெள்ளத் தெளிய......'

சிவனுக்கு ஆத்திரம் பற்றி வந்தது. 'இதோ உன்னை ......' என்று ஆரம்பித்தார்.

'பிடி சாபம் வேண்டாம் ஐயனே. அதனால் எவ்வளவோ விஷயங்கள் தெரியாமலே போய்விடும்.' என்றான்.

பிறை சூடிய பித்தன் நகைத்தார். 'நன்று நன்று!' என்று சிரித்தார். வெங்கலப் பாத்திரங்களை உருட்டிவிட்டது போலவும், மேகங்களை மோதவிட்டது போலவும் ஒலி எழுந்து வானமண்டலத்திலே வியாபித்தது.

அந்தப்புரத்திலே பாமாவுக்கு கற்றைக்குழலை கருநாக நெளிவு போல் பின்னிமுடித்துக் கொண்டிருந்த விஷ்ணு அதை அரைகுறையாக விட்டுவிட்டு விழுந்தடித்து ஒடி வந்தார். வரும்போதே 'என்ன, என்ன விஷயம்? இது யார்?' என்று கேள்விகளை எறிந்தார்.

'பூலோகவாசியாம். நமக்கு பல விஷயங்கள் போதிக்க வந்திருக்கிறானாம்!' என்று கூறிச் சிரித்தார் சிவன்.

'வேடிக்கை தான்!' என்று மாய நகைபுரிந்த விஷ்ணு கேட்டார்: 'என்ன சொல்லப் போகிறாய்?'

'என்னத்தைச் சொல்ல! உங்கள் தொழில் லட்சணத்தை கொஞ்சம் கண்ணைத் திறந்து பாருங்கள் என்று தான்!'

'உன் தலையில் என்ன இருக்கிறதோ!' என்று மனிதன் விதியை எண்ணி ஏங்கினார் விஷ்ணு.

பிரம்மா வஞ்சம் தீர்த்துக்கொள்ளும் வேகத்துடன் 'ஒரு சட்டி செய்யும் அளவுக்கு இருக்கும்' என்றார். மற்ற இருமூர்த்திகளும் அவரை நோக்கினர், விஷயம் புரியாமல்.

'களிமண் தான்! இவனுக்கு மூளை இருந்தால் இப்படி உளறுவானா?' என்று தன் ஹாஸ்யத் திறமையை நயமாகச் சொட்டவிட்டார் சிருஷ்டி கர்த்தா.

அந்த மனித ஜந்து குரல் கொடுத்தது: 'தேவ தேவர்களே, எனது நிலை அதுவேயானால் கூட அதன் தவறு உங்களுடையது தானே. மண்ணைக் கொண்டு உயிர்களைப் படைத்து மண்ணோடு மண்ணாக அவதியுறவிட்ட நீங்கள் ......'

அவனை முடிக்கவிடாது குறுக்கிட்ட காத்தல் கடவுள் 'என்ன குறையோ!' என்றார் ஏகத்தாளமாக.

'விழிப்புடன் பார்த்தால் தெரியும்' என்றான் அவன்.

'ததாஸ்து' என்றனர் மூவரும். வினோதமாக சிறிது பொழுதுபோக்கலாமே என்ற எண்ணம் போலும்!

சிவபிரான் மூன்றாம் பிறையுடன் போட்டியிடும் மௌன நகை உதடுகளில் மலர, ஈட்டியை சிறிது சுழற்றினார், கண் பறிக்கும் மின்னல் போல ஒளியின் பாய்ச்சல் ...வானத்திலே விரிந்தது ஒரு சாளரம்!

'குழந்தாய், உயர்ந்த நோக்குடன் நீயும் பார்' என்றார் விஷ்ணு.

அந்த அற்ப மானிடன் மௌனமாகச் சிரித்து நின்றான். அவன் வேறு என்ன செய்வது! ஒளி நிறைந்த வெள்ளிகள் போல விழிகள் மலர்ந்தன வியன் உலகை நோக்கி.

# 3

## பொம்மலாட்டம்

காலம் எல்லையற்ற வெளியாக விரிந்து கிடக்க, நிகழ்ச்சி அலைகள் எழுந்தும் ஓய்ந்தும் மீண்டும் எழுந்து புரள்கின்ற வேளையிலே, உயிர்க் கூட்டங்களை மணலாகக் குவித்து சிறு வீடு கட்டிக்கொண்டிருந்தாள் அவள். திடீரென வெறி பற்றியது போல கல கலவென நகைத்தாள். சிரமத்துடன் கட்டிய சிற்றிலைச் சிதைத்துவிட்டு கும்மியடித்துக் குதித்தாள் அவள். அவள் சிரிப்பு அருவியின் சலசலப்பு போல, தென்றலில் சிலிர்த்த தளிர்களின் மெல்லொலி போல, குழலில் எழும் நாதங்கள் போல ஊர்ந்தது.

தன்னைச் சுற்றி நோக்கினாள் நந்தி தான் அசை போட்டுக்கொண்டிருந்தது. பித்தனைக் காணப் பித்தம் தலைக்கேற அந்தப் பித்தி காலணிகள் கட்டியம் கூற, தலை அவிழ்ந்து கூத்தாட, வெறிகொண்டு கிளம்பினாள் ...

கண்ணாடியில் மின்னும் தன் எழிலைக் கண்டு பெருமிதம் கொண்ட பாமா, அதை ரசிக்க மாயவன் ஏன் இன்னும் வரவில்லை என்று பெருமூச்செறிந்தாள். காத்திருந்தாள். காலம்தான் ஓடியது. அவளுக்குப் பொங்கி வந்த கோபத்திலே முக்கால்வாசி பின்னப்பட்டிருந்த கூந்தலை அவிழ்த்து உலைத்துவிட்டாள். 'வரட்டும் வந்து இன்னொரு தரம் பின்னட்டும்!' என்று கறுவிக் கொண்டாள். அப்படியும் வந்து சேரவில்லை அவர்!

'ஒரு வேளை ருக்மணி வீட்டுக்குப் போய்விட்டாரோ' என்ற எண்ணம் தலைகாட்டியது, அந்த நினைப்பே ஆத்திரத்தை அதிகரிக்கச்செய்யவும் நிலைகொள்ளாமல் குதித்தெழுந்தாள். கருங்குழல் நெளிவுகள் காற்றில் அலைபடும் தென்னங் குருத்துகள் போல் விசிற, மயில்க் கழுத்தும் போல பட்டு ஒளி சிதற, ஓயிலாக நடந்தாள் அவள்.

வேகமாக சலசலத்து ஓடும் ஓடை போலவும், வாலை முறுக்கிவிடப் பட்ட வண்டிக் காளை போலவும் விரைந்து வந்துகொண்டிருந்தாள் ருக்மணி. இருவரும் சந்தித்ததும் 'அங்கில்லையோ அவர்?' என்ற ஏக்கக் குரல்கள் ஆவைத கீதத்தின் இறுதி அடிகள் போல் இழைந்தன. ஆகவே இருவரும் நடந்தனர்...

வெள்ளைத் தாமரை போல் செய்திருந்த மஞ்சத்திலே படுத்திருந்த சரஸ்வதிக்கு பொழுது போகவில்லை. எழுந்து சோம்பல் முறித்தாள். 'ஒய்யாரமாகப் பொழுது போக்க வழியே இல்லையே. பொழுது போகவேண்டுமென்றால் வீணை தான் கதி, ப்சே!' என்று அலுத்துக்கொண்டாள், அவரைக் காணோமே என்ற ஏக்கம் பிறந்தது. நடந்தாள், உணவு கொரிப்பதற்காக முன்னால் தள்ளிய மார்பை அழகு பார்த்துக்கொண்டு கழுத்தை அழகாக அசைத்து அசைத்து கர்வ நடை பயிலும் வெண் புறாவைப் போல...

ஒரே விதமான லட்சியத்தைக் கொண்டு கிளம்பிய தேவியர் நால்வரும் வான வில்லின் வர்ணக் கலவைகளைப் போலவும், அந்தி வானத்தின் ஒளிக்கோலங்கள் போலவும், நந்தவனத்து வண்ண வண்ண மலர்களைப் போலவும் கூடி அற்புதமாகக் காட்சியளித்தனர்.

'நாம் ஒருவரை ஒருவர் பார்த்தே ரொம்ப நாட்களாயிற்றே' என்ற பேச்சு 'கோரஸ்' ஆக ஒலித்தது.

'ஆமாம். நேரம் எங்கிருக்கிறது?' என்றாள் பொழுது போகவில்லையே என ஏங்கிய வாணி.

'ஒய்வு ஒழிவே இல்லை. வேலை, வேலை, வேலை' என்று குறைகூறினாள், விளையாடுவதையும் ஆடுவதைப் பார்ப்பதையும் தவிர வேறு வேலை அறியாப் பார்வதி.

தன் அழகை கவனிப்பதிலேயே காலம் தள்ளும் பாமாவோ 'எவ்வளவு வேலை கிடக்கு கவனிக்க!' என்றாள். ருக்மணியும் என்னவோ முனகிவைத்தாள்.

'போகிறது. இன்று நாம் சந்திக்கும்படி நேர்ந்தது...'

பார்வதி பேசிமுடிக்கவில்லை. அதற்குள் இடியோசை போல சிரிப்பு வானத்தின் மூலைக்கு மூலை உருண்டது. கொடி வீசி நடமிடும் மின்னல் போல் ஒளிச்சாளரம் வானில் கீறுண்டது.

தேவியர் திகைத்தனர்.

வாணி அருகில் நின்ற ருக்மணியிடம் 'அந்தப் பித்தர் சிரிக்கிறார் இப்படி! என்னவோடி யம்மா, இந்த மாதிரிக் கூப்பாட்டையும் கூத்தையும் கௌரி எப்படித்தான் சகித் துக்கொண்டிருக்காளோ!' என்று முணமுணத்தாள்.

சிவகாமி குரலை உணர்ந்ததுமே மான்குட்டி போல் துள்ளி முன்னேறத் தொடங்கிவிட்டாள், மற்றவர்களும் பின்னால் விரைந்தனர்......

'இதென்ன கொலு பொம்மைகள் உயிர்பெற்ற மாதிரி ....'என்று ஆரம்பித்தான் மனிதன்.

திரும்பி நோக்கிய சிவன் அவன் மண்டையில் ஒரு தட்டுத் தட்டினார். அவன் வாய்திறப்பதற்குள் தேவியர் மின்னலாக ஒளிர்ந்து மூர்த்திகள் அருகில் நின்றனர்,

'என்ன இங்கே கூட்டம்?' என்று நெற்றியைச் சுழித் தாள் சிவகாமி.

'யாரது! என் பக்தன் போல்......' என்று ஆரம்பித்த சரஸ்வதிக்கு 'ஷ்ஷ்' என்று வாயடங்குச்சட்டம் போட் டார் பிரம்மா.

'ஓஹோ ஹோ!' என்று மனிதன் சிரித்ததும் எல் லோர் பார்வையும் அவன் மீது பதிந்தது.

'ஏன் அர்த்தமற்ற சிரிப்பு?' என்று வெகுண்டார் சிவன், தன் பண்பை மறந்தவராய்.

'எனக்கு தமிழ் சினிமாவில் பதிவிரதைகள் கதை களின் முடிவுக் காட்சி நினைவுக்கு வருகிறது. இங்கு உள்ளதைப்பார்த்ததும்' என்றான் அவன்.

'உளருதே!'

எல்லோரும் கீழே நோக்கினர். உற்று நோக்கினர்.

'அப்படிப் பார்க்க அங்கே என்ன இருக்காம்!' என்று சிணுங்கினாள் பார்வதி. 'கழுத்து தான் வலிக்கிறது' என்றாள் பாமா. 'கண்ணை உறுத்துகிறது' என்று மலரால் கண்களை வருட ஆரம்பித்தாள் வாணி. ருக்மணி 'ஒன்றுமே தெரியவில்லை' என்றாள்.

தேவர்கள் ஆமோதித்தனர்.

'புகைச் சுருள்கள்...சூன்ய வெளி...மேக மந்தை...... பூலோகப் புழுதி...வேறு என்ன! குப்பை மேடுகள் போல் தோற்றங்கள். மண்ணோடு ஊர்ந்து விண்ணை மறந்து விட்ட மனிதப்பிறவிகள்......'

'நிறுத்துங்கள்' என்றான் மனிதன்.

'என்ன துணிவு!' என வியந்தாள் வாணி.

அடுக்கிக் கொண்டு வந்த விஷ்ணு திகைத்துவிட்டார்.

அவன் சொன்னான்: 'உங்கள் தோல்வியைத் தான் சுட்டிக் காட்டுகிறீர்கள், இப்படிச் சொல்வதன் மூலம். அதனால் என் கட்சிக்கே வெற்றி வந்து சேரும்'

'தெளிவாக ஒன்றும் தெரியவில்லையே!'

'அது தான் கூறினேனே நீங்கள் பார்க்கும் சக்தியைக் கூட இழந்துவிட்டீர்கள், உங்களுக்கு கண் இல்லை!' என்றான்.

'யார் இந்தப் பைத்தியம்?' என்று பார்வதி வினவினாள்

'நமக்கு வேடிக்கை காட்டப் போகிறான்!' எனறு சொல்லி, சிறு நகை புரிந்தார் சிவன். 'பொம்மைக்கூத்தா?' என்று சிவகாமி ஆவலுடன் கேட்டாள்,

'பொம்மைகள் ஏன்! இந்த இடமே பொம்மைக்கொலு வாக மிளிர்கிறதே' என்று நகைத்தான் பூலோகவாசி.

'பூலோகத்தில் நடப்பவற்றை நாம் பார்ப்பதில்லையாம் நமக்குக் காட்டுவதற்காக......' என்ற விஷ்ணுவிடம் 'நீங்கள் தான் அடிக்கடி அவதாரமாக மாறி அங்கே போனீர்களே' என்றாள் ருக்மணி.

'அப்பொழுதே விழிப்புடன் கவனித்திருந்தால் தான் உலகம் உருப்பட்டிருக்குமே!' என்றான் மனிதன்.

'உலகம் உருப்படவில்லை என்று சொல்கிறாய்' என்ற 'கோரஸ்' எழுந்தது.

'நீங்களே பாருங்கள் என்று தானே கூறிக்கொண்டிருக்கிறேன்.'

'அது தான் பார்க்க வந்துவிட்டோமே' என்று புன்னகை புரிந்தார் சிவன். 'வேண்டுமானால் பூலோகத்துக்குக் கூட போகத் தயார்' என்று சொன்னார் விளையாட்டில் பூரணமாக ஈடுபடத் துணிந்த விஷ்ணு.

மனிதன் மட்டும் திடமாகக் கூறினான்: 'இது விளையாட்டல்ல. நீங்களே உணரமுடியும் என்று தான் நம்புகிறேன்.'

பிரம்மாவுக்கு சிறு ஆசை பிறந்தது. 'அப்படியானால் இங்கிருந்து பார்ப்பதைவிட பூலோகத்திற்குச் செல்வதே நல்லது' என்று முணமுணத்தார்.

'அதுவே சரி. நானும் அந்தப் பக்கமெல்லாம் போய் வந்து எவ்வளவோ காலமாயிற்று. கிளம்புவோமா?' என்று சிவனை நோக்கினார் விஷ்ணு.

சிவன் 'ஆகா' என்றார். தொடர்ந்தே 'என்ன கிளம்பலாமே!' என்று மனிதன் கையைப் பற்றினார். அவன் 'மூட்டை முடிச்சுகள்?' என்று கேட்டு வைத்தான்.

'அதெல்லாம் ஏன்! இப்படியே போவோம்' என்று விரைந்தார் சிவன். 'இந்தக் கோலத்திலே கூடாது. கொஞ்சம் வேஷம் மாறவேண்டும்' என்று விஷயம் அறிந்த விஷ்ணு சொல்லவே, மூவரும் மாறினர்.

இந்த வேடிக்கையை கவனித்து நின்ற தேவியர் மூக்கில் விரல் வைத்தனர். 'யார் இந்தப் பைத்தியம்! அவன் தான் உளறுகிறுன் என்றுல், நீங்கள் சுகமாய் இருப்பதை விட்டுவிட்டு அலேகிறீர்களே!' என்று முகத்தைச் சுளித்தார்கள்,

'ஒரு மாற்றம் வேண்டும் அல்லவா!' என்ருர் விஷ்ணு.

'நாங்கள் மட்டும் இங்கு இருக்க வேண்டுமாக்கும்!' என்று சிணுங்கினர் தேவியர். 'எங்கள் பிரிவால் தனிமை பெற்று வாழ்வது உங்களுக்கு ஒரு மாற்றம் இல்லையா' என்று கூறிவிட்டு, தயாராஞர்கள் கடவுளர்.

அப்பொழுது தான் வேகமாக ஓடிவந்தான் எமதர்மன். ஒன்று கூடி நின்ற தேவியரையும் வேஷம் போட்டு நின்ற மும்மூர்த்திகளேயும் வணங்கிவிட்டு 'அப்பாடா! இந்தப் பயல் இங்கேதான் இருக்கிருன்! எங்கோ பதுங்கி விட்டான் என்று பயந்தேன்' என்று பற்களேக் கடித்தான்.

'பிளாக் மார்க்கெட் முறை இங்கு இன்னும் தலே காட்ட வில்லேயே. ஆகவே பதுங்கிக் கிடக்க வகை ஏது?' என்று சிரித்தான் மனிதன்.

'வாயை மூடு. வா என்னுடன்' என்று கர்ஜித்த எம தர்மன் சொன்னுன்: 'ஸ்வாமி, என்னே மன்னிக்க வேண்டும். சிறிது கவனக் குறைவால் இந்த நரன் இப் புண்ணிய ஸ்தலத்துக்கு வந்து விட்டான். வேலேத் தொல்லே. இப்போதெல்லாம் பூலோகத்திலிருந்து ஏற்றுமதி அதிகம். ஆகையால் உள்ள ஆள்களே வைத்து வேலேயை சரியாக நிர்வகிக்க முடியவில்லே.........'

'ஆட்கள் தேவை என்று விளம்பரம் செய்வது தானே' என்ருன் நரன். 'வேலேயில்லாத் திண்டாட்டம்

கொஞ்சம் குறையுமே! உங்களுக்கும் உதவியாளர்கள் கிடைப்பார்கள்'

'அகம்பாவ ஜந்து' என்று கண்களை உருட்டி விழித்தான் எமன். 'ஸ்வாமி, அனுமதி தர வேண்டும், இவனை இழுத்துச் செல்ல'

சிவபிரான் கடுமையாகவே மொழிந்தார்: 'அவனை ஒன்றும் செய்யக் கூடாது. அவன் பூலோகத்திற்குச் செல்வான்'

'தேவ தேவா, அது...மரண தண்டனை......'

'கடமையை மறந்த உனக்கு தண்டனை விதிக்கப்படாததை எண்ணி சந்தோஷப்படு. போ. அவன் இனி இறந்தவனல்ல. கணக்கில் சரிசெய்து விடு' என்று கூறி ஈட்டியைச் சுழற்றினர்.

கண் பறிக்கும் ஒரு மின்னல்—ஓர் இடி

தேவியர் கண் மூடித் திறந்தனர்.

மூவரும் நரனும் அங்கு இல்லை!

எமனைத் தேடிக் கொண்டு சித்திரபுத்திரன் வந்து சேர்ந்தான். 'சரி, கணக்கைத் திருத்து. அவன் போய் விட்டான்' என்ருன் கூற்றுவன்.

பார்வதி கேட்டாள்: 'யார் அவன்?'

ஏட்டைப் புரட்டிய வானத்துக் கணக்கரின் வாய் முனங்கியது: 'பெயர் கிருஷ்ண பிள்ளை. தொழில்: புளுகுவது........'

'புளுகுவதே ஒரு தொழிலாக நடந்து வருகிறதா பூலோகத்திலே?' என்று கேட்டாள் சிவகாமி.

'ஆமாம். அதற்கு இலக்கியம், கலை என்று அழகான பெயர்கள் வேறு கொடுத்துக் கொள்கிருர்கள்!' என்ருர் சித்திரபுத்திரர்

வாணி கோபமாக நோக்கினுள். அதை உணர்ந்த கணக்கர் 'மன்னிக்க வேண்டும் தாயே. உண்மையைச் சொன்னேன்' என்று முனங்கினுர்.

யோசனையில் ஆழ்ந்திருந்த எமன் 'எழுதிப் பிழைக்கும் அவனுக்கு வயசு என்ன போட்டிருக்கிறது, சீட்டுக் கிழிக்க வேண்டிய......' என்றுன்.

'தேதி தெளிவாகக் குறிப்பிட வில்லை. ஸ்வாமி. கால அளவு பிளாங்கியாக விடப்பட்டிருக்கிறது' என்று விநய மாக விடை பகர்ந்தார் கணக்கர்.

'ஊம்' என்று உறுமிவிட்டு தன் வாகனத்தில் ஏறி மறைந்தான் எமதர்மன். தேவியருக்கு வணக்கம் செலுத்தி விட்டுச் சென்றுர் சித்திரபுத்திரர். இனி என்ன செய்வது என்பதைப் பற்றி சிறு 'மகாநாடு' கூட்டி ஆராயத் தொடங்கினர் அம்பிகைமார்கள்!



# 4

## கிருஷ்ண பிள்ளை

உலகில் எவ்வளவோ குழந்தைகள் பிறக்கின்றன. எத்தனையோ சாகின்றன! என்றாலும் வாழ்க்கையின் லட்சியங்களை ஆணித்தரமாகக் காட்டும் சின்னங்களுடன் பிறக்கும் சிசுக்கள் மிக அபூர்வம். அத்தகைய அபூர்வப் பிறவிகளின் பட்டியல் ஒன்று தயாரித்தால், அதில் முக்கிய இடம் கிருஷ்ணபிள்ளைக்கு உண்டு.

'ஆறு கண்ணுக்கும் தெரியாத அரிச்சந்திரன் தாலி— பாவிப் பறையன் கண்ணுக்குத் தெரியலாச்சே!' என்று பிற்காலத்தில் நாடகமேடை 'அயன்' ஸ்திரீ பார்ட் சந்திரமதி வேஷத்திலே ஒப்பாரிவைப்பதற்கு ஏற்றபடியாக பார்வையில் படாத மாயத்தாலியுடன் பிறந்த சந்திரமதி ......காதிலே குண்டலங்களுடன் பிறந்த கொடைவள்ளல் கர்ணன்—இப்படிப் பிரபலம் அடைந்த அதிசயப் பிறவிகளின் குலமுறையிலே ஒருவராக உதித்தவர் கிருஷ்ண பிள்ளை.

முந்தியவை எல்லாம் இலக்கியக் கற்பனைகள் என்று சொன்னாலும் கூட, இலக்கியத்தையே கற்பிக்க வந்த கிருஷ்ண பிள்ளையைப் பற்றி அப்படிச் சொல்ல முடியாது. தனது வாழ்க்கை லட்சியம் சிரிப்பது தான் – உலகத்தைப் பார்த்து, மனிதர்களைப் பார்த்து, கடவுள்களைப் பார்த்து, எல்லாவற்றுக்கும் மேலாக தன்னையே பார்த்துச் சிரிப்பது தான் - என்று பிற்காலத்தில் ஒலிபரப்பிய கிருஷ்ண பிள்ளையின் லட்சியத்தை பிறவியிலேயே கூறும் சின்னங்கள் அவர் கூடவே பிறந்தன.

அதாவது, கிருஷ்ண பிள்ளை பிறந்த அன்றே அவர் வாயில் இரு பற்களும் பிறந்திருந்தன. வானின் செக்கரிடையே நகவளைவு போல் சிரிக்கும் மூன்றாம் பிறை போல, சிவந்த உதடுகளின் பின்னால், வாய் நடுவில் இரண்டு பற்களும் சிரித்தன. பார்த்தவர்கள் பலவாறு அபிப்பிராயங்கள் உகுத்தனர்.

'பற்களோடு பிறந்திருப்பது நல்லதல்ல' என்றூர்கள் சிலர். 'ரொம்ப நல்லது' என்றூர்கள் சிலர். வருங்காலத்தில் எடுத்ததெற்கெல்லாம் சிரிக்கப்போவதை அறிவிப்பது போல் அப்பொழுதும் பல்லைக் காட்டிக்கொண்டு தான் கிடந்தது குழந்தை.

குழந்தை ஒரு நாடோடிப் பாடகனுகி யிருந்தால் 'நான் பிறந்தது வெள்ளிக் கிழமை - ராஜா தேசிங்கு! என் குதிரை பிறந்தது வெள்ளிக் கிழமை-ராஜாதேசிங்கு! என் கத்தி பிறந்தது வெள்ளிக் கிழமை - ராஜா தேசிங்கு!' என்ற தேசிங்கு ராஜன் பாடலின் சுவட்டிலே பாடிக் களித்திருக்கலாம். 'நான் பிறந்தது வெள்ளிக் கிழமை - முத்து மாரியம்மா! என் பல் பிறந்தது வெள்ளிக் கிழமை- முத்து மாரியம்மா! நான் என்ன செய்வது பல்லைக் காட்டாமல் – முத்து மாரியம்மா!' என்று பாடத் தெரியாமல் கிருஷ்ண பிள்ளை அழுது அழுதே வளர்ந்ததாக சரித்திரம் கூறுகிறது.

அது கூட அவர் பெரிய மனிதராகவேண்டியவர் என்பதைத் தான் பிரகடனம் செய்தது போலும்! பெரிய மனிதர் ஆவதற்கு அத்தியாவசியமான குணங்களான அகம்பாவமும், பிடிவாதமும் அவருக்கு இருந்தன என்று அவரே அடிக்கடி சொல்லிக்கொள்வது உண்டு. அந்த இரண்டு குணங்களும் அவர் கூடப்பிறந்த இரண்டு பற்களுக்கும் இருந்தன. அவற்றுக்குப் பிறகு முளைத்த பற்கள் விழுந்தும் முளைத்தும் மறுமலர்ச்சித் தத்துவத்தை நிரூபித்துக்கொண்டிருக்க, இந்த இரண்டு பற்கள் மட்டும் பிடிவாதமாக பிடித்து வைத்த பிள்ளையார் போல்—ஆடாமல் அசையாமல் இருந்தன.

இதை சகிக்காத கிருஷ்ண பிள்ளை அந்த நகைச் சுவைச் சின்னங்களுக்கு 'கல்தா' கொடுத்ததும் ஒரு வெள்ளிக் கிழமையில் தான்.

வெள்ளிக் கிழமை மாலை. பிள்ளையார் கோவிலில் ஏகப்பட்ட கூட்டம். பக்தர்கள் தேங்காய்களை 'வெடலை' போட்டார்கள். உடைபட்டுச் சதிராடிச் சிதறும் சில்லுகளைப் பொறுக்கத் தயாராக தார் பாச்சி வேட்டியைக்

கட்டி நின்ற சின்னப் பயல்களில் கிருஷ்ண பிள்ளையும் காணப்பட்டார். சிதறி வந்த பெரிய துண்டு ஒன்று கையில் சிக்கவே குதித்துக் கொண்டு வெளியே வந்த கிருஷ்ண பிள்ளை சிரட்டையுடன் பற்றிக்கொண்டிருந்த தேங்காயை பலவந்தமாகப் பிரிக்க பிடிவாதமாக பற்களை ஏவினர். அப்படி நடந்த போராட்டத்தில், தேங்காய் துண்டாகி வாய்க்குள் போனது என்னவோ உண்மை தான். அதே போல், அவருடன்பிறந்து அகம்பாவத்துடன் வளர்ந்த முன் பற்கள் இரண்டும் ஒரேயடியாக வெளி யேறியதும் உண்மை தான்!

அதற்காக அவர் அழவில்லை. என்றாலும் சிரிக்கும் ஞானோதயம் ஏற்படும் வரை கிருஷ்ணபிள்ளையின் வாழ்க்கையில் அழுகை தான் முக்கியத்துவம் பெற்றது என்று அவரது குலமுறைகிளத்துப்படலம் விளம்புகிறது. அதன் காரணம், இன்பத்தின் அடிப்படை துன்பம் தான், துன்பத்தின் இதயத்திலே தான் இன்பம் பிறக்கிறது, அழுகை தான் சிரிப்பை வாழவைக்கிறது என்பன போன்ற வேதாந்த நீதிகளின் நடைமுறை நிகழ்ச்சிகளாக இருக் கலாம். எப்படியிருந்தால் என்ன! சிரிக்கப்பிறந்த கிருஷ்ண பிள்ளை பல வருஷங்களுக்குப் பிறகு சிரிக்கவே தொடங்கி விட்டார்!

அந்த ஞானோதயம் ஏற்பட்டதே தம் வாழ்க்கை புராணத்தில் சோகமயமான ஒரு ஏட்டைப் புரட்டி நினை வெளியில் நிறுத்திய போது தான். கப், கப்பாக காப்பி சாப்பிட்டுக்கொண்டிருந்த போது தான் பழைய சம்பவம் நினைவுக்கு வந்தது. தினந்தோறும் சாயங்கால வேளை களில் காப்பி குடித்துப் பழகிய சிறுவன், திடீரென காப்பியை நிறுத்தவேண்டிய நிர்ப்பந்தம் சிக்கனம் என்ற பேரால் தலைகாட்டிய போது, சண்டித்தனத்தில் இறங் கினன். தலையை வலிக்கிறது என்று புளுகி ஒன்றிரண்டு தினங்கள் காரியத்தைச் சாதித்துக் கொண்டாலும், பிறகு இந்தப் 'பாச்சா' பலிக்கவில்லை! எவ்வளவு அடம் சாதித் தும் 'பருப்பு வேகவில்லை' என்று கண்ட பையன் புழுங்கி ஞன். கேவலம் ஒரு தம்ளர் காப்பி கூடவா கிடைக்கவில்லை என்ற எண்ணத்தால் தற்கொலை செய்யத் துணிந்து விட்டான்! ஆனல், இருட்டறையில் புத்தக ஸ்டாண்டின்

பின்னால் இரவு முழுவதும் பம்மிக் கிடந்து 'செத்துப் போறேன். சாகப் போறேன்' என்று உருப்போட்டும் கூட 'தற்கொலை' வெற்றிகரமாக முடியவில்லை!

இதை எண்ணியபோது தான் விழுந்து விழுந்து சிரிக்கத் தொடங்கினார் கிருஷ்ண பிள்ளை. அந்தச் சிரிப்புதான் அவரது வாழ்க்கைக் கனவின் திறப்பு விழா! லட்சியத்தின் அஸ்திவாரம்!

இப்படி சிரித்தும் சிரிக்கப்பட்டும் வாழ்க்கை நடத்திய கிருஷ்ண பிள்ளை வேறு தொழில் புரிய உடம்பு வளையாத தால் புளுகுவதையே பிழைப்பாகக் கொண்டார். புளுகு வதை அழகாக, அற்புதமாக, கனவாக, ஒயிலாக – இன்னும் எப்படி எப்படியெல்லாமோ!–புளுகினால் பொழுதும் போகிறது! புகழும் வருகிறது!' என்று கண்ட அவர் அதையே வாழ்க்கையாக்கிக்கொண்டதில் வியப்பில்லை. அதன் மூலம் சிரிக்கவும் அவருக்கு அதிகமான 'சான்ஸ்' கிடைத்தது. அப்புறம் என்ன!

இந்த ரீதியிலே வாழ்ந்த கிருஷ்ண பிள்ளை ஒரு நாள் செத்துப்போனார். எல்லோரும் சாகவேண்டியது தான் என்ற நியதிப்படியே! ஆனால் அவர் ஆத்மா முனங்கியது! 'நான் சாகவில்லை. வெயில் என்னைச் சுடாது. மழை என்னை நனைக்காது. தீ என்னை எரிக்காது. நானே நான். நான் சிரிக்கிறேன். இப்படித்தான் பகவான் கிருஷ்ணன் கீதை யிலே சொல்லியிருப்பதாகக் கேள்வி! அப்படி நடக்கா விடில் எல்லாம் பொய்யாகிவிடும். ஆமாம்!' என்றது.

அது மேலும் சொன்னது: 'நான் அமரன். நினைத்த உடனேயே சைத்தான் முன்னால் வந்து நிற்கிறான் என் பதைப் போல நான் பலமுறை நடந்திருக்கிறேன். என்னைப் பற்றிப் பேச ஆரம்பிக்கிறவர்கள் முன்னிலே நான் தோன்றியிருக்கிறேன். உடனே அவர்கள் உனக்கு ஆயுசு நூறு வருஷம் என்று சாபம் கொடுத்ததுண்டு. எத் தனையோ பேர் எத்தனையோ தடவைகள் சொல்லியது உண்டு. சிலர் தான் எமன் ஏமாந்தால் என்றும் சேர்த்து முனங்கினர். ஆமாம். எமன் ஏன் ஏமாறக்கூடாது? எண்ணி

யது எண்ணியபடி எய்தும் என்றால் எத்தனையோ பேர் எண்ணிய இந்த எண்ணம் ஏன் நிறைவேறக் கூடாது?'

எப்படி நிகழ்ந்ததோ — எண்ண அலைகளின் வைர சக்தியால் தானோ என்னவோ! - எமன் ஏமாந்துதான் போனான்! அதனால் கிருஷ்ண பிள்ளை மீண்டும் சிரிக்க முடிந்தது.



# 5

## மயக்கம்

கும்பல் ஏறு அலைகள் போலவும் இறங்கு அலைகள் போலவும் புரண்டு மோதி நெருக்கடி விளைவிக்கும் மாலை வேளை அல்ல. ஆகையால் ஹோட்டலில் அவ்வளவாக பரபரப்பு இல்லை, அமைதியும் இல்லை.

காலியாகக் கிடந்த மேஜைகளின் முன்னால், இயந்திரம் போல் உழைத்து அலுத்துப்போன சிறுவர்கள் சிலர் நின்றனர். சில மேஜைகளில் ஒன்றிருவர் சாப்பிட்டுக்கொண்டிருந்தனர். கும்பல் இல்லையென்றாலும், கூச்சல் போட்டுப் போட்டுப் பழகிவிட்ட 'ஸெர்வர்' ஒருவன் தொண்டை கிழியும்படி குரலின் உச்ச நிலைக்கு கூவிக்கொண்டிருந்தான்.

சாப்பிடுகிறவர்களின் மெல்லிய பேச்சொலி, 'ரவா தோசே... டபிள் ஆர்டினரி ரோஸ்ட்...' என்று ஒலி பரப்பும் போதே 'ரெண்டு பேர் ஆறணா... ஒராள் ஒரு அணா' என்று கத்தி கணக்கு ஒப்புவிப்பதுடன் பரிமாறிக்கொண்டுமிருந்தான்.

நாகரிகம் மிகுந்த நகரின் ஹோட்டல் அல்ல அது. நகரம் என்று சொல்லத் தகுந்தபடி இன்னும் பரிபூரண நிலை அடையாத சுமாரான ஊரின் பிரபல ஹோட்டல் அது. சாப்பிட வருகிறவர்களின் பொருளாதாரம் வயிற்று ஆதாரம் முதலிய தன்மைகளுக்கேற்பச் சாப்பிட்டுவிட்டு மற்றவர்களுக்குத் தெரியாமல் காசைக் கொடுத்துவிட்டு நழுவ வகை செய்யும் 'பில்' நாகரிகம் அந்த ஹோட்டலில் தலை காட்டவில்லை. ஒரு வேளை காகிதப் பஞ்சம் காரணமாக எவ்விவிட்ட விலையேற்றத்தை உத்தேசித்து அனுஷ்டிக்கப்படும் சிக்கனமாகவும் இருக்கலாம்!

எதானால் என்ன! சாப்பிட்டுவிட்டுப் போகிறவர்களின் மானம் 'கப்பல் ஏறும்படி'யாக நடுத்தெருவில் போகிறவர்களின் காதிலும் படும்படி 'ஒரு ஆள் எட்டணு' என்றும் 'இரண்டுபேர் ஓரணு' என்றும் அம்பலப் படுத்தும் கூச்சல் முறைதான் அந்த ஹோட்டலில் இருந்தது. முந்தியவனுக்கு பசியும் பணமும் இருந்திருக்கலாம். அந்த 'இரண்டு பேர்' சும்மா மிக்ஸ்சரை கொரித்துவிட்டு ஒரு டம்ளர் தண்ணீரை ஊற்றி வயிற்றெரிச்சலை அவித்திருக்கலாம். அவர்களுக்கு எவ்வளவோ கவலை! அது யாருக்குத் தெரியும்? கணக்கு காதில் விழுந்ததும், ஒருவனை சாப்பாட்டுராமன் என்றும், மற்ற இருவரையும் 'வெறும்பயல்கள்' எனவும் கருதிவிட்டுப் போகிறான் தெருவில் நடப்பவன்.

ஊம்... இதையெல்லாம் ஹோட்டல்காரர்கள் சீர்தூக்கிக்கொண்டிருக்க முடியுமா என்ன! 'என்ன இருக்கிறது சூடா?' என்று கேட்டவருக்கு 'நெருப்பு இருக்கு கணகணன்னு' எனக் கூறிவிட்டு 'உங்களுக்கு என்ன வேணும், ஸார்?' என்று திரும்பினான்.

'இட்லி இருக்கா?'

'நாளைக் காலையில் இருக்கும். ஊம், அப்புறம்?' இந்த ரீதியில், உழைப்பில் அடிபட்டு இயந்திரமாகவே மாறிவிடவில்லை என்பதை நிரூபித்துக்கொண்டிருந்த அவனுக்கு 'நாலு காப்பி' என்ற 'ஆர்டர்' கிடைத்தது. அவன் பார்த்துவிட்டு 'வேறே ஒண்ணும் வேண்டாமா—தோசை, வடை, மிக்ஸ்சர், ஸ்வீட்...? ஒண்ணும் வேண்டாமா?...அலுப்பு விட்டது!' என்று முனங்கியபடி உள்ளே சென்றான்.

கை விரல்களால் நாலு செட் 'காப்பி'யை லாகவமாக எடுத்து வந்து மேஜையில் வைத்துவிட்டு ஒவ்வொரு செட்டாக எடுத்து திறமையுடன் ஆற்ற ஆரம்பித்த அவன் பார்வை மேஜையருகில் சென்றது. காசு வாங்க அமர்ந்திருக்கும் மேஜையின் பக்கம் தான் மற்றவர்கள் பார்வையும் பறந்தது. அப்படிப் பாராதவர்களின் கவனத்தையும் கவரமுயற்சிப்பது போல் எழுந்து விளையாடியது கலகல நாதம். கைவளைகளின் கலீன் ஓசைக்கு ஆண்களின் கவ

னத்தை இழுக்கும் மந்திரசக்தி இல்லையென்று யார் தான் சொல்ல முடியும்?

மேஜை முன் நின்ற அந்த பிம்பம் பிறர் கவனத்தைக் கவரத் தக்கதே! ஜவுளிக் கடைகளில் பாஷன் சரக்குகளை விளம்பரப் படுத்த அபாரமாக அலங்காரம் செய்து நிறுத்தி வைத்திருக்கும் பொம்மை போல் நின்றாள் அவள். யாரோ நவயுவதி! அவளாக சில்லறையை கொடுத்து விட்டுப் போயிருக்கலாம். அவ்விதம் செய்யட்டும் என்று எதிர் பார்த்துத்தானோ என்னவோ அவன் கணக்கு ஒப்புவிக்காமல் இருந்தான். அவள் பொம்மை போலவே தான் நின்றாள்.

முதலாளி மணியை 'ணிங்' என்று ஒலிக்கும்படி ஆத்திரமாக அடித்துவிட்டுக் 'கணக்கு?' என்று கேட்டார். எரிச்சலுடன் சொல்வது போல் தொனித்தது எழுந்த பதில்; 'அரையணா... நபர் ஒண்ணு! அரையே அரை அணாதான் என்று கூவி விட்டு 'இந்தலட்சணத்துக்கு ஒரு நடை நடந்து வந்துட்டாளே அம்மா!' என்று முணமுணத்தான்.

அவள் காதில் விழுந்ததோ விழவில்லையோ அவள் திரும்பிப் பார்த்தாள். அந்தப் பார்வை வீச்சிலேயே பலர் தன்னையே கவனிப்பதையும் ஓரத்தில் உள்ள மேஜையருகில் அமர்ந்து காப்பி பருகுபவன் கேலிக்குறிப்புடன் நோக்குவதையும் அவள் உணர்ந்துவிட்டாள்.

இன்னும் காசு கொடாமல் நிற்பதை கவனித்த ஸெர்வர் வேண்டுமென்றே 'அரையணா என்று கத்தினான். தொடர்ந்து உள்ளே யாருக்கோ' ஸ்வீட்டா? குஞ்சாலாடு இருக்கு ரெண்டணா ஸார், குஞ்சாலாடு ஸார் இன்னிக்குப் போட்டதுதான் ஸார், வேணுமா ஸார்... குஞ்சாலாடு ஸார்' என்று அடுக்கினான், அவன் ஒரு தமாஷ் பேர்வழி,

யாரும் எதிர்பார்க்கவில்லை. முழித்துக்கொண்டு நின்ற அலங்காரி 'வீல்' என்று கீச்சுக் குரலில் கத்திவிட்டுக் கீழே விழுந்தாள். திடீரென மூர்ச்சை போட்டு விட்டது. காரணம் தெரியாமல் எல்லோரும் பரபரப்புக் காட்டினர்.

'தண்ணியை மூஞ்சியிலே தெளிங்க' என்ருர் ஒருவர். 'விசிறுங்க ஸார், விசிறுங்க' என்று போதித்தார் ஒருவர். ஓரத்து மேஜை முன் இருந்தவர் அவசரம் அவசரமாக ஓடிவந்தார். 'காப்பி கொண்டு வாங்க ஸார். ஸ்டிராங்கா இருக்கட்டும்' என்ருர், ஸெர்வர் சும்மா நிற்கவே 'கொண்டு வாய்யா! காசை என் பில்லிலே சேர்த்துப் போடு' என்று கத்திஞர் அவர்.

அவன் சென்று காப்பி கொண்டு வந்தான். வாங்கி ஆற்றிவிட்டு கொஞ்சம் கொஞ்சமாக அவள் வாயில் ஊற்றிஞர். உள்ளே சென்ற ஒவ்வொரு மடக்குக் காப்பியும் அவளுக்கு உணர்ச்சி ஊட்டியது. அவள் கண்களைத் திறந்தாள். மெதுவாக எழுந்து உட்கார்ந்தாள். சுற்றிலும் மிரட்சியுடன் நோக்கிஞள். திடீரென வெட்கம் கொண்டவள் போல் வேகமாக எழுந்து தலை கவிழ்ந்து நின்ருள். அவள் கை விரல்கள் காசை அவிழ்த்து எடுக்கச் சென்றன'

'நானே கொடுத்துவிடுகிறேன்' என்று கூறி அவர் பணம் கொடுத்தார். அவளிடம் 'இப்பொழுது எப்படியிருக்கு? வீடெங்கே? இப்படி தனியாக வரலாமா?' என்று பரிவுடன் விசாரித்தார் அவர். அவள் நாணமுற்றது போல் விழிகளை ஏவி மீட்டு ஏதோ முனங்கிஞள், தெளிவில்லாமலே.

'பாவம் இன்னும் மயக்கம் நன்கு தெளியவில்லை. ஒரு வண்டி பாருங்க ஸார், வீட்டிலே கொண்டுபோய்விடலாம்' என்ருர் அந்தப் பரோபகாரி. அவர்கள் நகர்ந்தனர்.

இவ்வளவையும் மூவர் இருந்த இடத்திலிருந்தே கவனிக்க, கிருஷ்ண பிள்ளை பதட்டமின்றி சாவதானமாக காப்பியைச் சாப்பிட்டுக்கொண்டிருந்தார்.

'என்ன இது! ஏனிப்படி?' என்று கேட்டனர் மூவரும் 'எல்லாம் பிஸினஸ் டிரிக் தான்!' என்று கூறிச் சிரித்தார் பிள்ளை.

'அப்படியென்ருல்?'

'பொறுங்கள். எல்லாம் தெரியும்' என்று சொல்லி காப்பியை ருசிப்பதில் முனைந்தார் அவர். ஹோட்டல் காரன் தனது பாடத்தை ஒலிபரப்பிக்கொண்டிருந்தான்.

வெளியே ஜட்கா வண்டி கிளம்பும் சப்தம் கேட்டது.



# 6

## நள்ளிரவில்

ஹோட்டலை விட்டு வெளியேறிய பின் நடுத் தெரு விலேயே நால்வர் மகாநாடு நடந்தது. அடிபட்ட முக்கிய பிரச்னை அடுத்தாற்போல் எங்கே போவது என்பதே. அந்த விஷயத்தில் அபிப்பிராய பேதங்கள் கூத்தாடின.

'எங்காவது போகலாம்' என்றார் மிஸ்டர் சிவன். 'அந்த... அந்த மங்கையின் கதையைப் பற்றி ஆராய...' என இழுத்தார் ஸ்ரீலஸ்ரீ விஷ்ணு. 'இஷ்டம் போல்' என்பது பிரம்ம வாக்கு. அசட்டுச் சிரிப்புடன் தலையைச் சொரிந்து நின்றது மனித ஜந்து

'ஊம். அப்புறம்?' என்று சிவன் கனைத்தார். நீ தான் சொல்லித் தொலையேன். இனி என்ன செய்வது?'

கிருஷ்ண பிள்ளை சொன்னார்: 'பழங்காலத்து தமிழ் மன்னர்களாக மாறலாமே கொஞ்சம்?'

'என்ன கூடுவிட்டுக்கூடுபாய்கிற செப்பிடுவித்தையா? அது எனக்கு வராது அப்பேன்! பழைய பரமசிவத்துக்குத் தான் சரி. மதுரை அனுபவம் ரொம்ப. இஷ்டம் போல் விளையாடினவர் இல்லையா!' விஷ்ணு சொல் உதிர்த்துவிட்டுச் சிரித்தார். சிவனை கிண்டல் செய்துவிட்டதில் மகிழ்வு.

'பிறவா யாக்கைப் பெரியோன் எனப் பூவுலகம் புகழும் எம் போலா நீவிர்! பிறந்து பிறந்து சாகும் பண்பு பெற்ற அவதாரம் தானே. அட அவதாரமே!' சிவன் சீற்றத்துடனேயே சிரித்தார்.

அப்பாவி பிரம்மனோ இந்த வாயடியில் கலந்து கொள்ள விரும்பாதவர் போல் ஒதுங்கி நின்றார். ஆனால் அந்த மனிதப் பிராணி அப்படி ஒதுங்கி நிற்க முடியுமா?

ஆகவே முன் வந்து கும்பிட்டது: 'ஸ்வாமிகளே! உங்கள் புரவோலத்தை நீங்களே முச்சந்தியில் நின்று கூவத் தேவையில்லை. உங்களுக்கு வக்கீல்களாக சினிமாக்காரர் கள் ஏற்பட்டு, சிவம் பெரிசா, விஷ்ணு பெரிதா என்று சண்டை போடும் ஆழ்வார்களேயும், நாயன்மார்களேயும் சுட்டுத்தள்ளுகிருர்கள். கச்சா பிலிமில் ஆடும் நிழல்களா கத் தான். ஆகையினுல் ஆண்டவன்மார்களே! நான் சொல் வது என்னவென்ருல்...

'ஏ. நிறுத்து உன் பிரசங்கத்தை!' என எரிந்து விழுந் தார் சிவன். 'பழங்கால மன்னர்கள் போல் ஆவதென்ருல் என்னவாம்?' என விழித்தார் விஷ்ணு.

'அகோதெப்படியென்ருல், கேளீர் கடவுளர்களே! பூவுலகில் பெயர் பெற்ற நாவலந்தீவாம் தமிழகத்தில் பண்டைத் தமிழ் மன்னர்களுக்கு வேறு அலுவல்களே இருந்ததில்லையாம். உழைத்தால் அல்லவா களைப்பு ஏற் படும்? தூக்கமும் வரும்! உறக்கம் கொள்ளாத மன்னர் கள் ராத்திரிகளில் ஊர் சுற்றுவார்களாம். ஆனுல் சுய உருவில் அல்ல. வேஷம் போட்டுக்கொண்டு தெருத்தெரு வாக அலைவார்களாம். அது நகர் பரிசோதனையாம்! நாமும் அப்படிச் செயலாமே என்றேன். அவ்வளவு தான்!' என்று பிரசங்கம் பண்ணினுர் பிள்ளை.

'முட்டாள்! ஊர் சுற்றலாம் என்று ரத்னச் சுருக்க மாகச் சொல்ல வேண்டிய விஷயத்துக்கு இவ்வளவு நீட்டி முழக்க வேண்டுமா!' என்று சிவனுர் முனங்கியது அவர் காதில் விழாமலில்லை. விஷ்ணுவும் முணமுணத்தார்: 'அப்போ குஞ்சாலாடு?'

கிருஷ்ண பிள்ளை குறும்புத்தனமாக நகைத்தபடியே 'அடடா, ஹோட்டல்லே இருந்தபோதே ஒரு ஸ்வீட் என்று குரல் கொடுத்திருந்தா தானு வந்திருக்குமே மேஜைக்கு!' என்ருர்.

'நான் அதைச் சொல்லவில்லை. குஞ்சாலாடு என்று கேட்டதும் மயங்கி விழுந்தாளே அவளைப் பற்றி அறிய வேண்டுமே என்று.....'

விஷ்ணு இழுத்து, நிறுத்தி முற்றுப்புள்ளி போடு வதற்கு முன்னர் சிவன் தலையிட்டுச் சிரித்தார்: 'என்ன இருந்தாலும் பூர்வ வாசனை போகாது தான். அது தான் கோபியருடன் கூத்தடித்த கோகுலத்து வாடை! ஹஹ்ஹ!' உள்ளக்களிப்பில் உதித்த சிரிப்பு திரிபுரம் எரித்த பேய்ச் சிரிப்பு போல் இடியொலித்தது. இனி அங்கு நின்றால் ஆபத்து. நாயோ நரியோ பேயோ என ஐயுற்று பலர் தடி களைத் தூக்கிக் கொண்டு வந்தாலும் வந்துவிடுவார்கள் எனப் பயந்து மனிதப் பிராணி தேவலோகப் பிரதிநிதிகளு டன் நகர்ந்தது.

மனிதரின் மன இருளோடு உறவுகொண்டாடுவது போல் இரவின் இருள் கனத்துக் கிடந்தது. அந்தகாரத் தினூடே சிந்தனையாளர்களின் அறிவுக் கதிர்கள் போல் அங்குமிங்கும் மின்சார விளக்குகள் ஒளிப்பல் காட்டிச் சிரித்துக்கொண்டிருந்தன.

எங்கும் தனிமையின் மோனம். உடலிலே பட்டுப் புளகிதம் உண்டாக்கும் குளிர் காற்று மெதுவாக நெளி யும் வேளை. நெளிந்து வளைந்து நீண்டு கிடக்கும் மலைப் பாம்பு போல ரஸ்தா தூங்கிக் கிடந்தது. பகல் முழுதும்- இரவில் நெடுநேரம் வரையிலும் - நடமாடும் நாடகங்கள் எண்ணற்றவற்றைச் சித்திரிக்கும் மேடையாகத் திகழ்ந்த நகர ரஸ்தா சுடுகாடு போல் கிடந்தது. உணர்ச்சிகளும் ஒலிகளும் ஒளிவண்ணங்களும் குழம்பி அவசர நாகரிகத் திலே ஆரவாரித்த நகரம் எவனோ ஒரு மாயாவாதியின் ஜாலத்துக்குக் கட்டுப்பட்டு சாவு நிலை அடைந்துவிட்டது போல் தோன்றிய அந்நிசி வேளையிலே உறங்கும் மனிதர் களை உள்ளடக்கிய சமாதிகளாக விளங்கும் வீடுகள் - பலரகப்பண்புகளையும் விளக்கமுயல்வதுபோல மோனத்து ஆழ்ந்து நிற்கும் விதம்விதமான கட்டிடங்கள்... மந்திர வாதியின் சாபம் பெற்று அசையாமல் நின்றுவிட்டவை போல் ஏக்கம் சிந்தி நெடு மூச்சைத் தங்கள் ஆயிரம் ஆயிரம் இலை நாசிகள் வழியாகவும் வான மண்டலத்திலே கலக்க விடுகின்ற மரங்கள் - தூங்கி வழியும் மரங்கள்... ஏதோ வரப்பிரசாதம் போல் ஒரே ஒரு ஒளிக் கனியை மட்டும் ஏந்தி நின்று பெருமை கொள்ளும் நெடுமரம்போல் தோன் றும் எலெக்ட்ரிக் கம்பங்கள்... தூரத்து உயர்ந்த கட்டி

டம் ஒன்றின் உச்சியிலே சந்திரன் குஞ்சு போல் மின்னி நீல ஒளி பெருக்கும் 'மெர்குரிலைட்'..

இரா நேரத்திலும், ஊரே உறக்கத்தில் கிடக்கிற தனி வேளையிலும், தூக்கமற்று நிசாசர கணங்கள் போல தெருவிலே திரிவதில் எவ்வளவோ இன்பமிருக்கிறது. எவ்வளவோ அழகை உணர முடியும். அப்படி ஆனந்தமாக அப்படி அலைவதே ஒரு அழகுதான்!

அந் நேரத்தில் ஊர்வலம் கிளம்பிய அந்த ஆத்மாக்கள் எண்ணியது அது தான்! அவர்கள் ஜாலியாக நடந்தார்கள். எங்கே போகிறோம், ஏன் போகிறோம் என்ற குறிப்பற்று நடந்தார்கள். கால்கள் சில சமயம் வேகமாக எட்டுகள் எடுத்துப் போடும். மறுவேளை சோம்பலாய் சுவடு தேய்க்கும். அவர்களது உள்ளங்களில் பலரக நினைவுச் சுழிப்புகள்.

உலகம் காலவெளியிலே அனந்த சயனம் புரிந்து கண்ணுறங்குவதாகக் கனவு கண்டது திருமாலின் திருவுள்ளம். கால் வருடும் கன்னியையும் தலையருகமர்ந்து தடவிக் கொடுக்கும் தேவியையும் நினைவில் பதித்தது. இந்த இரவு நேரமும், தூக்கமும் இல்லாவிட்டால் மனிதப் பிராணிகள் எந்தக் காலத்திலோ செத்திருக்கும்! விழிப்பின் வேதனையிலிருந்து உயிர்களுக்கு சாந்தியளிப்பது தூக்கம் தான். அது இனியது. அது நன்று. தூக்கம் வாழ்க! - இந்த ரீதியில் வாழ்த்தியது அவர் உள்ளம்.

சுடலைப்பொடி பூசி பேய் நடம் புரிவதிலேயே பித்துக் கொண்ட 'கங்கா ஜடி'க்கு தூக்கத்தில் கிடந்தஊர் சாவின் முடிவான சுடுகாட்டைத்தான் நினைவுக்கு இழுத்து வந்தது. மரணம் உயிர்க் குலத்துக்கு ஒரு வரப்பிரசாதம். அதில்லாவிட்டால் வாழ்க்கை நித்திய நரகமாக அல்லவா ஆகிவிடும்! சில பைத்தியங்கள் அமரத்துவம் வேண்டுமென்று அடம் பிடிப்பதைக் காணும் போது அவர்களது மூளையற்ற தன்மையை எண்ணிச் சிரிக்கத்தான் தோன்றுகிறது... சிரிக்க மட்டும் தானா தோன்றுகிறது! என் கை உடுக்கையும் டமடமடொம்...டொம்டொம என்று உரக்க நகை உதிர்க்கும்படி தூண்டி, கழல்கள் பின்னணி போட,

திம்திகுதிம்......திம்தோம் மென்று கூத்திட வேண்டும் போல் தோன்றுகிறது. இப்பொழுது கூடத் தான்! சரி யான சூழ்நிலை தான். ஆனால்...ஆனால்... ஆடும் கூத்து கண்டு ரசித்துச் சிரித்து ஆர்வமூட்டி, பின் உணர்வு மிகுதி யிலே தானும் இணைந்து கொடிபோல் துவண்டு, மின்ன லாய் ஒளிர்ந்து தொட்டும் ஒட்டியும் விளையாடும் நாகங் கள் போல் பின்னியும் பிரிந்தும் நடனத்துக்கே தனி வெறி யும் தெய்வீக அழகும் தரவல்ல தேவி சிவகாமி என் அரு கில் இல்லையே!

அதை எண்ணவும் அவர் மனம் சுட்டது. உள்ளம் சுட்டது. உடல் சுட்டது. கண்கள் எரிந்தன. நெற்றியிலே சிறு கனல் ஜொலித்தது. லேசாக தற்செயலாக அவரை நோக்கிய மனிதஜந்து கண்களைக் கசக்கிக் கொண்டு மீண் டும் பார்த்தது ஆச்சர்யத்துடன். திரும்பவும் கவனித்தது. வியப்புடன் திரும்பத் திரும்ப நோக்குவது கண்ட சிவனார் 'என்ன?' என்று சீறினார். அது உறுமி உதிர்க்கும் 'ட்ர்ரும்' என்ற தனியொலி போல் விழுந்தது.

அவன் சிரித்தபடி சொன்னான் 'ஒரு சந்தேகம் பிறந் தது' என்று.

'என்ன?' என்று சொல்லுதிர்த்தார் சிவன். இப் பொழுது அது உடுக்கின் ஒடுங்கிய 'டுடும்' போல் ஒலித் தது!

'ஒன்றுமில்லை. சும்மா ஒரு நினைப்பு' என்று இழுத் தான் அவன்.

'என்ன?' என்று கேட்டார் அவர். கழல்களின் சிறு கலகலப்பாக ஒலித்தது அது. அவன் சொன்னான்: 'திடீ ரென்று சிறுபொறியின் பிரகாசம் தெரிந்ததா? எனக்கு சந்தேகம் எழுந்தது. நீங்கள் ஒரு வேளை சிகரெட் பற்ற வைத்து உறிஞ்சுகிறீர்களோ என்று. பிறகு தேவலோகத் தில் தான் அது கிடையாதே என்ற நினைப்பு வந்தது. சில சமயம், பூலோகத்துக்கு வந்ததும் குளிர்காரணமாக சிக ரெட் பீடி உபயோகிக்கும் வாசனையும் தானாகவே ஏற் பட்டுவிட்டதோ என்ற எண்ணமும் வந்தது. அது தான்

கவனித்தேன். பார்த்தால், உங்கள் நெற்றியில் சிறு விழிப்பு. அவ்வளவு தான்!'

'அது சரி என்னனென்னமோ சொன்னுயே அதெல்லாம் என்ன?' என்று கேட்டார் சிவன். இப்போது அவர் குரலில் மஞ்ஞையெனக் கொஞ்சலாக நடைபயிலும் சக்தியின் கால் சிலம்பொலியின் ஏற்றங்களும் இறக்கங்களுமான இன்னிசை தொனித்தது!

'உங்களுக்குத் தெரியாதா?' என்று கேட்டான் அவன்.

'அது எப்படித் தெரியும்! கஞ்சா மட்டும் தான் அந்த ஆண்டவனுக்குத் தெரியும்' என்று வீணைக் குறுக்கிட்டார் விஷ்ணு. அவரும் சம்பாஷணையை கவனித்து வந்திருக்கிறுர்.

அவர் மட்டும் என்ன! தனது சிருஷ்டிப்பண்பாட்டு நோக்கிலே இரவு, உயிர்க்குலம், சிருஷ்டித்தொழில் இதை பற்றி 'சிந்தனேப்பின்னல்' நீளவிட்டுக் கொண்டே நடந்த பிர்ம்மனும் பேச்சை கவனிக்கத் தான் செய்தார். 'பெரிய இடத்து விவகாரங்களில்' அவர் தலையிடுவதே கிடையாது அதனுல் அவர் தனி மோனத் தவத்தையே அநேகமாக கையாள்வது பழக்கமாயிற்று. அது தங்கமான பழக்கமாயிற்றே!

விஷ்ணுவின் கிண்டல் சிவனின் ஆத்திரத்தைக் கிளறி கோபச்சொற்களைக் கொப்புளிக்கச் செய்வதற்கு முன்னதாகவே, கிருஷ்ணபிள்ளை விளக்கத் தொடங்கியது நல்லதாயிற்று. 'விஷயம் என்ன வென்ருல், இந்த சிரெட்டினுசுகளெல்லாம் பூலோகவாசிகளின் ஜீவசத்துக்கள். மண்ணிலே பிறந்து மண்ணிலே மண்ணுய் மக்கும் வரை மண்ணையே நம்பி வாழவேண்டிய மக்கள் தங்கள் உள்ளக் கொதிப்பையும் — பல சமயங்களில், வயிற்றுக் கொதிப்பையும் — மண்ணுக்க இந்தச் சரக்குகளின் புகையையே நம்பியிருக்கிருர்கள். எண்ணற்றோர் காப்பி, டீ தினுசுகளை உபயோகிப்பது போல, பலர் வேறு திரவபதார்த்தங்களுக்கும் அருள் புரிவதுண்டு! சும்மா ஜாலிக்காகவும் பூஜிக்கப்படும் பழக்கமும் அதிகம்......'

'சரி சரி, போதும்! வீணாக அளக்காதே!' சிவன் வாய டங்குச் சட்டம் போட்டார்.

அவர்கள் நடந்து கொண்டுதானிருந்தனர். பணமும் படாடோபமும் டாலடிக்கும் வட்டாரங்கள், பாழ்மை குடிகொண்ட கட்டவெளிகள், ஏழ்மை கொலுவிருக்கும் தெருக்கள் — இப்படி எவ்வளவோ பார்வையில் பட்டு பின் தங்கின. சமாதியிலிருந்து வெளிவந்து திரியும் உருவம் போல தலைகுனிந்து தளர்நடை நடந்து செல்வான் எவனு வது அவ்வப்போது. மாயாஜால முனி போல் திடீரென எங்கிருந்தோ தலைகாட்டி மறுபடியும் ஒரு சிறு தெருவுக் குள் பம்மிவிடுவான் ஒருவன், எப்பொழுதாவது ஒரு முறை எங்கோயிருந்து காற்றில் கலந்துவரும் வியாதிக்காரனின் கொடிய இருமல். உயிரே போய்விடுவது போல் அலறும் குழந்தைக் குரல்......

முக்க முழுக்க மயானமாகிவிடவில்லை அந்த நகரம் என்பதை ஒலிபரப்பும் உயிரின் சின்னங்களாகத் திகழ்ந்த அவை இரவின் தனிமையில் கோரமாகவே விளங்கின. எங்கும் வியாபித்திருக்கும் இருள் திரையின் மறைவிலே அந்தரங்கமாக எத்தனை எத்தனை கோரநாடகங்கள் நடக் கின்றனவோ, யார் அறியமுடியும்! சோகக்கதைகளும், இன்ப நவீனங்களும் — ருசி பேதமுள்ள பலரகமான நிகழ்ச்சிகளும் தான் — இரவின் ஆழத்திலே எங்கெங்கு எப்படி எப்படி நடைபெறுகின்றனவோ, யாரே புள்ளி யிட்டுக் கூறமுடியும்! வாழ்க்கை ஒரு புதிர். சிக்கலான பல இழைகள் கூடிப் பின்னி தாறுமாறாகக் குலைந்து கிடக்கிற ஒரு புதிர். அதை முழுவதும் அடி முடி கண்டுவிடும்படி பிரித்துவிட முடியாது. வாழ்வை உணர்ந்ததாகப் பெருமை கொள்கிறவர்கள் யானையைப் பார்த்து மகிழ்ந்த குருடர் கள் மாதிரி தான்...... தத்துவ ஆராய்ச்சியில் தறிகெட்டு ஓட ஆரம்பித்தது கிருஷ்ண பிள்ளையின் மனம். அதை உணரவும் தானாகவே சிரித்துக்கொண்டார் பிள்ளை. அவருக்குப் பைத்தியமோ என்று எண்ணச்செய்யும் பண்பு களில் இதுவும் ஒன்று!

தங்கள் தங்கள் எண்ணச் சுமை அழுத்த அவர்கள் மௌனமாகவே நடந்தார்கள். ஒளியும் இருளும் கலந்த

வெளிகள் பலவும் தாண்டிச் சென்ற அவர்கள் கண் முன் ஒளி ஊற்றுக்கள் பொங்கிப் பிரவகிப்பதுபோல் மின்சார விளக்குகள் பளிச்சிட்டன. சமாதி நிலை பெற்றுக் கிடந்த ஊருக்கு எதிரிடையான உயிருலகமாய் திகழ்ந்த அந்த இடம் மும்மூர்த்திகளுக்கும் வியப்பளித்தது. 'இது என்ன?' என்ற கேள்வி அதை பிரதிபலித்தது.

'இதுவா; இது... இது வந்து .. நடுநிசி நகரம்' என்றார் கிருஷ்ண பிள்ளை புன் சிரிப்புடன்.





# நடுநிசி நகரம்

இரவு வேளையிலும் அமைதியற்று, பரபரப்பாக விளங்கிய அந்த இடத்தை கிருஷ்ண பிள்ளை அழகாக நடுநிசி நகரம் என்று சொன்னதில் தவறில்லை தான். அது அந்நகரின் ரயில்வே ஸ்டேஷன் எனினும் அது தனி நகரம் தான்!

பொதுவாக, நாகரிக நகரங்களின் ரயில்வே நிலையம் தனி உலகம்! ஏழ்மை, பணக்காரத்துவம், ஜாதி பேதம், ஆண் பெண் உயர்வு தாழ்வு என்ற சுழிப்புகள் தலை காட்டாத இடம் என்றாலும் அதிகாரமிடுக்கு அவ்வப்போது கூத்தாடும். அமைதியும் ஆரவாரமும் மாறிமாறி அலைமோதும் மனிதர்கள் அடிக்கடி மிருகங்களாகிவிடுவதும் அங்கேதான்! அதாவது ரயில் வரும்போதெல்லாம்! அப்பொழுது பிராயணிகள் தாங்கள் அநாகரிகப் பிராணிகள் என்று நிரூபித்துவிடுவார்கள்!

பகலைவிட இரவில் தான் இத்தனி நகரின் சிறப்புகள் பல புரியும். அதிகாலையில் வரும் ரயிலுக்காக இரவு முழுவதும் கண் விழித்துக் காத்திருப்பவர்கள் கொஞ்சித் தழுவ வரும் தூக்கத்தை விசுவாமித்திர வைராக்கியத்துடன் விரட்டிக்கொண்டு கண்களை மூடித் திறந்தபடி உட்கார்ந்திருப்பார்கள், சைனா பிரேதங்கள் போல. தூக்க மோகினியிடம் ஏய்ப்புக்காட்ட முடியாத எண்ணற்றோர் 'சும்மா முழிச்சுக்கிட்டே படுத்திருக்கலாமே!' என்ற மன அரிப்புக்கு செவி சாய்த்து நீட்டி நிமிர்ந்து, உறக்கத்துடன் உறவு கொண்டாடவே ஆரம்பித்து விடுவர். இத்தகைய லட்சியமோ, பிகுவோ கொள்ளாத பலர் ஸ்டேஷனுக்கு வந்ததுமே நல்ல இடம் அகப்படாவிடில், கிடைத்த இடத்திலேயே-கூனிக் குறுகி ஒடுங்கி சமாதி நிலை பயிலத் தொடங்குவதும் சகஜம். இந்த ரகங்களால் கண்ணுள்ளவர்களுக்கு சுவையான காட்சிகள் எதுவும் கிட்டாது.

தூக்கத்தைத் தியாகம் பண்ணிவிட்டு குஷியாக வம் பளப்பவர்கள். தூக்கம் அவர்களை மறந்துவிட்டதால் தாங்கள் 'தூங்குவதே இல்லை' எனப் பெருமையடித்தபடி கண்களைக் 'கொட்டுக் கொட்டு' என விழித்துக்கொண்டு திரியும் 'ஜம்பம் ஜான்கள்' தூங்க இடம் இல்லாக் காரணத் தால் தூக்கத்தை அதிதியாக உபசரிக்க மறுத்து விரட்டத் துணிந்து அங்குமிங்கும் அலைகிறவர்கள், வரப்போகும் ரயிலை எண்ணும் ஏக்கமும் பணமும் சாமான்களும் பறி போய்விடுமோ என்ற பயமும் சேர்த்து விழிப்புற்றிருக்க விட்டிருக்கும் தூங்கு மூஞ்சிகள் – இவர்கள் இரவு நாட கத்தின் சுவையான கதாபாத்திரங்கள். இவர்களைத் தவிர கடமையின் பெயரால் திரியும் போலீஸ்காரர்களும், பணத் திலே குறியாய் அலைந்து 'இரவுத்தொழில்' வளர்க்கும் பெண் ஜந்துக்களும், பணப் பெருக்கமும் குடிமயக்கமும் மிருக வெறியும் மிஞ்சிவிட்டதால் கண்டபடி திரியும் வெள்ளைக்காரஸோல்ஜர்களும் நடுநிசி நகரத்துக்கு உயிர்ப் பும் சோபையும் பூசுபவர்கள்.

இத் தனி உலகின் அலைகளில் கலந்து விழிப்புடன் கவனித்த கடவுளர்களும், கிருஷ்ண பிள்ளையும் எவ்வ ளவோ சுவையான விஷயங்களை உணர்ந்தார்கள்.

தங்களை தேவர்கள் என்று நினைத்துக் கொண்ட போதையில் ஸ்டேஷன் கட்டிட மாடியில் குதித்துக் குதித்து, பாட்டு என்ற பெயரால் ஊளையிட்டபடி கண் களை வானத்தை நோக்கி நீட்டி ஆடிய சில ஸோல்ஜர்கள் தம்மை மறந்த நிலையில் கீழிறங்கி வந்தனர். விண்மீன் கள் எல்லாம் விசித்திர ஒளிகளாகவும், மின்சார விளக்கு கள் எல்லாம் நட்சத்திரங்களாகவும் தோன்றிய அவர் களுக்கு பரஸ்பரம் தத்தம் இன்பக் காதலிகளாகவே பார் வையில் பட்டனர் போலும்! ஒருவரை ஒருவர் இழுத்து அணைத்தபடி ஆனந்தக் காற்றில் மிதப்பது போல் மோ கன நடனம் புரியத் தொடங்கினார்கள், அவர்கள் கூத்தும் கூச்சலும் காட்டுத்தனமாகவும் வேடிக்கையாகவும் இருந் தாலும் கூட அவர்களைப் பார்த்தவர்களுக்கு சிரிக்கக் கூட துணிவில்லை. குடித்துவிட்டு அலையும் அம் முரடர்கள் தங்கள் மீது பாய்ந்தாலும் பாய்ந்து விடலாம் என்ற பயம் தான் காரணம்,

மனித சமுதாய சேவை செய்வதாகக் கர்வங்கொண்டு திரிகின்ற அந்த 'அதிமனிதப் பிறவிகள்' தள்ளாடி நடந்த படி முன்னேறினர். ஸ்டேஷன் முன் நின்ற பிளஷர் கார்கள் மீது போய் விழுவது போல் நடந்தனர். சிலர் வழ வழப்பான பிளஷர் பாகங்களை அருமையாகத் தடவிய வண்ணம் 'என்ன இனிமை! என்ன இனிமை!' என்று சொக்கிப் போனார்கள், அழகிகளின் பட்டுடலை ஸ்பரிசித்து மகிழ்வது போல. அவர்களது பசி தீர்க்கும் இடங்களுக்கு அவர்களை அழைத்துச் செல்ல லாரி ஒன்று வந்தது. அவர்கள் ஏறியதும் வெறித்தனமாக உறுமியபடி. ஓடி மறைந்தது.

அந்தக் காட்சி கரைந்ததும் வேறு நாடகத்தில் பதிந்தது வேடிக்கை பார்க்க வந்தவர்களின் கவனம்.

கறுகறு வென அடர்ந்திருந்த புதிர் மீசையும், கில்லாடித்தனமான தலைப்பாகையும், மிருக வெறியுடன் கனன்ற கண்களும் உடைய முரடன் 'புருவேட்டை' ஆடிக்கொண்டிருந்தான்! அவன் வலைக்குள் அகப்படாமல் ஓடி ஓடிப் பதுங்கிய 'புரு' இரவில் சில வெறியர்களுக்கு இன்றியமையாத் தேவை ஏற்பட்டு இடம் பொருள் முதலியவற்றை சட்டை செய்ய முடியாத அளவுக்கு கொதிக்கச்செய்கிற பசியை அடக்கப் பயன்படும் மாமிச பிண்டமாகும். ஆட்கள் கூடித் தூங்காமலும் பொழுது போகாமலும் திரி கின்ற அந்த இடத்திலே தினசரி அவளது 'வியாபாரம்' லாபகரமாகவே நடந்தது! அவள் அந்த முரடனைக் கண்டு பயந்து ஓடுவதேன்?

அவள் ஒளிந்து ஒளிந்து போலீஸ்காரர்கள் இருவர் பேசி நின்ற இடத்துக்கு வந்து சேர்ந்தாள். 'அவன் தடியன். எனக்கு அவனைக் கண்டாலே பயமாயிருக்கு. அவனை விரட்டி விடுங்கள்' என்று கெஞ்சினாள், தூண்டில் பார்வைகள் எறிந்த வண்ணம். அவர்களோ அவளிடம் விளையாட ஆரம்பித்தார்கள்.

'உனக்கு இது சகஜம் தானே. ஏன் வேஷம் போடுறே?' என்றான் ஒருவன். மற்றவனோ 'பணம் தான் நிறையக் கிடைக்குமே!' என்றான்.

'அவன் தடிப்பண்ணி. ஏமாத்திப் போடுவான்' என்று கூறி, ரகசியக்குரலில் ஆசைகாட்டினுள். அவர்கள் பிரிந்தார்கள்.

மோப்பம் பிடித்து அலேந்த முரடனை தனியாக அழைத்துச் சென்று என்னவோ சொன்னுர்கள். பயமுறுத்தினுர்கள். வேறு என்ன செய்தார்களோ! சில நிமிஷங்களுக்குப் பிறகு அவன் ஆத்திரமாக சொல் அனல் சிதறியபடி நடந்து சென்ருன். அவன் மறையவே அந்த 'இராப் பறவை' வளையல்களைக் குலுக்கிக்கொண்டு குலுங்கிக் குலுங்கிச் சிரித்தபடி இருளில் மறைந்தது......

'அண்டங்கள் அத்தனையும் நின்ருடத் தான் ஆடி' மகிழும் பிரானும், உலகெலாம் இன்புறத் தான் ஆலிலே மேல் யோகத் துயில் புரியும் காத்தற்கடவுளும் பெருமூச்சு எறிந்தனர். அம் மூச்சின் கொடுமை தாங்காமல் தானே என்னவோ வானகத்து மீன் ஒன்று விண்வீழ் கொள்ளியாக உருகி உதிர்ந்தது, கண்ணை உறுத்தும் ஒளியுடன்.

'இது உலகம்!' என்று முனங்கினுர் விஷ்ணு.

'இல்லே! உங்கள் சிருஷ்டிக்கோளாறு! வாழ்க்கையின் ஒரு துளி. உலக நியதிக்கு ஒரு சிறு அணு' என்று குறுக்கிட்டார் கிருஷ்ண பிள்ளை 'உலகம் இந்த ரீதியில் தான் முன்னேறுகிறது. வாழ்க்கையின் அந்தரங்கத்தை சம்பிரதாயம் நாகரிகம் முதலிய திரைகளை நீக்கி விட்டு, ஊடுருவிப் பார்த்தால் புல்லாகிப் பூண்டாகிப் பல்விருடமாகிப் புழுவாகி மீனுய் மிருகமாய் மனிதனுகி என்று ஒரு பக்தர் பரிணும ஜாதகம் பாடினுரே அந்த ரீதியில் வளர்ச்சியுற்றிருந்தாலும் கூட சிருஷ்டியில் சிறப்பு இல்லே. சிருஷ்டியின் சிகரமான மனிதகுலம் இன்னும் மிருக நினைவு மாருப் பிராயத்திலேயே இருக்கிறது......' அவர் 'வழவழ' என்று புராணம் பரப்ப ஆரம்பித்ததும். அது குற்றச்சாட்டுகளாக நீளுவதும் மற்றவர்களுக்குப் பிடிக்கவில்லே.

'ஏய், நிறுத்தப்பா! சும்மா போட்டு கொரகொரான்னு வரட்டுத் தவளே மாதிரி......' என்று மண்டையிலடித்தார் மிஸ்டர் சிவன்.

எங்கிருந்தோ வந்து நின்ற ரயில் பெரிய கும்பலை வெளியே கக்கியது. தூக்கத்தில் நடப்பவர்கள் போலவும், திக்குத் தெரியாமல் திண்டாடித் திணறி நடை போடுகிறவர்கள் போலவும், பஞ்சத்தில் அடிபட்டும் பயத்தில் அடிபட்டும் வந்து விழுகிறவர்கள் போலவும் மனித ஜந்துக்கள் நெளியும் கும்பல் அந்தத் தனி உலகத்துக்கு தனி உயிர்ப்பு தந்தது.

'சரி வீணாக இங்கு நிற்பானேன்?' என்று வினவினார் தனிமை நாடும் முக்கண்ணன்.

'எங்காவது போவோம் வேடிக்கை பார்க்க' என்று அறிவித்தார் கண்ணன். 'அப்படியே' என்று பிரம்மா ஆமோதிக்க 'விடுவோம் சவாரி' என்று எட்டுகள் போட ஆரம்பித்தார் கிருஷ்ண பிள்ளை.

பரபரப்பான இடத்தைத் தாண்டி, ஒன்றிரண்டு ஜட்காக்களும் மனிதரும் ஊரும் வட்டங்களைக் கடந்து, இருளின் சாயைகள் போல் அங்கங்கே நடக்கும் தனி உருவங்கள் காட்டும் வழிகளையும் பின் நிறுத்தி இஷ்டம் போல் முன்னேறினார்கள் அவர்கள் நால்வரும். நீண்ட ரஸ்தாவை விட்டு விலகி, பெரிய பெரிய தெருக்களைக் கடந்து, சிறு தெரு ஒன்றிலே நடந்த போது மாயவன் தம்மையும் மறந்து 'அட!' என்று சொல் உதிர்த்தார். மற்றவர்கள் அவரைக் கவனித்தனர். பின் அவர்கள் விழிகளும் அவரது கண் சென்ற பாதையில் போயின, உடனே 'ஓஹ்ஹோ!' என்று வியப்பு மலர்ந்தது.

காரணம் கண்ணில் விழுந்த காட்சியே!



# 8

## குமாரி கனகாம்பரம்

'பின்னல் ஜடை. மின்னல் இடை, என்ன நடை! என்ன ஒயில்! என்ன ஸ்டைல்!' என்று புளித்துப் போன முறையிலே குமாரி கனகாம்பரத்தை அறிமுகம் செய்ய வேண்டிய அவசியமே கிடையாது, சுருங்கச் சொல்லி விளங்க வைத்துவிடலாம் 'அவள் ஒரு நவ யுவதி' என்பதன் மூலம்!

கண்ணாடி அழகு செய்யும் வதனமும், கண்ணாடிக் கன்னங்கள் இல்லாக்குறையை மறைக்க கண்ணாடி முன் நின்று பல மணி நேர உழைப்பை வீணாக்கி பவுடர் வெள்ளையடித்த மூஞ்சியும், கலகலக்கும் கண்ணாடி வளையல்களுமாய் வழக்கம் போல் பள்ளிக்கூடம் கிளம்பிய கனகாம்பரம் வழக்கம் போல் வீடு திரும்பவில்லை அன்று. ஆகையால் கன்னி கனகாம்பரத்தைப் பற்றிக் கொஞ்சம் அளக்க வேண்டியது அவசியமாகிறது.

தன் மகள் படித்துப் பட்டம் பெற்று உத்தியோகம் பார்க்க வேண்டும் என்ற ஆசையுடன் அவள் தந்தை அவளைப் பள்ளிக்கூடம் அனுப்பவில்லை. 'என்னவோ நாலு எழுத்துத் தெரிந்திருக்கட்டுமே' என்ற தாராள நோக்கிலே பள்ளியில் புகுத்தப்பட்ட கனகாம்பரம் 'பிரைமரி'யை தாண்டியதும், 'வீட்டிலேயிருந்து தான் என்ன செய்யப் போறு! சும்மா படிக்கட்டுமே!' என்ற தந்தையின் விசால நோக்குடன் பல படிகள் தாண்டி ஹைஸ்கூலை அடைந்தாள். தந்தையும் இந்த உலகத்தை விட்டு 'பாஸ் ஆகிவிட்டார்!' அப்புறம் நாகரிக மோகம் கொண்ட மங்கை படித்துத் தான் ஆகவேண்டும் என்ற உறுதியுடன் பள்ளிக்கூடம் போய்வரத் தொடங்கினாள்.

உண்மையில் அவள் படிக்க வேண்டியது எவ்வளவோ இருக்கத் தான் செய்தது! நாள் தோறும் அவள் கைநோக

அடுக்கிச் சென்ற புத்தகக்கற்றைகளைப் பார்த்துவிட்டுச் சொல்லவில்லை. புத்தகங்களுக்கு அப்பால் பட்ட ஞானமும் அனுபவமும் தான் அவள்படிக்க விரும்பியது என்பதை அவள் செயல் நிரூபித்தது நாகரிக தர்மாமீட்டராகத் திரிந்த குமாரி கனகாம்பரம்நவயுக தர்மங்களை கலாசாலைக் கன்னிகளுக்கே உரிய தனித்துவத்துடன் கற்றுத் தெளிந்தாள் என்பதை, ஒரு நாள் அவள் அந்த ஊரை விட்டு 'அந்தர்த்தியானம்' ஆனது அருமையாக விளக்கியது.

அக்கறையுள்ளவர்கள் ஆராய்ச்சி செய்து பின்னர் கண்டுபிடித்த கதை இது:

பள்ளிக்கூடம் போவதாகச் சொல்லி கனகா தினம் வீட்டை விட்டுக் கிளம்பியது என்னவோ உண்மை தான். நாள் தோறும் மாலையிலே அவள் சரியான நேரத்துக்கு வீடு திரும்பியதும் அங்கீகாரம் பெற்ற விஷயமே. ஆனால் தினம் தவருமல் அவள் பள்ளிக்கூடத்தில் ஆஜராகவில்லை என்று புள்ளி விவரம பேசியது! சந்தேகம் கொண்ட ஆராய்ச்சியாளர்கள் நம்பத்தகுந்த வட்டாரங்களிலும், நம்பத் தகுதியில்லாத நபர்களிடமும், விஷயம் அறிந்தவர்கள் மூலமும், விஷயமறியாதவர்களின் வதந்திகள்வாயிலாகவும் சேர்ந்த அபிப்பிராய அவியலைக் கிளறித் துருவிப் பார்த்ததன் பயனுக மகத்தான உண்மைகள் புலனுயின.

கலாசாலை செல்லும் தளவாடங்களுடன் அழகு செய்து கிளம்பும் கன்னி இஷ்டமிருந்தால் கலாசாலை சென்ருள். கஷ்டமாகத் தோன்றிய நாட்களில் இஷ்டம் போல் சுதந்திரமாகப் பொழுது போக்கினுள். அவளுக்கு அதில் துணை புரிந்தவன் ஒரு மாணவன். ஆராய்ச்சியாளர்கள் சிறிது அதிகச் சிரமப் பட்டிருந்தால் அவன் பெயரையும் அறிந்திருப்பார்கள். 'ஐயோ, பாவம்!' என்ற தாராள நோக்குடன் வேண்டாமென விட்டுவிட்டார்கள். 'பார்க்கப் போனுல் பெயரில் என்ன இருக்கிறது!' என்ற கருத்தில் அவர்களுக்கு அசையாத நம்பிக்கை.

அவர்கள் நம்பிக்கை கிடக்கட்டும்! எலலோரும கனகா கலாசாலை சென்று வருகிருள் என்று நம்பிக்கை கொண்டிருந்த வேளையிலே, சொல்லித் தெரிவது இல்லாக் கலை

யான மன்மதக் கலையில் அனுபவ பூர்வமான பயிற்சிகள் பெற்று இன்ப ஞானம் வளர்த்து வந்த குமாரி - மாணவன் கூட்டு மூளைத் திட்டத்தின் பயனாக, இருவரும் வேறு நகரம் சென்று மணம்புரிந்து வாழ்வில் மறுமலர்ச்சி ஏற்படுத்திவிடுவது; அதன் மூலம் லட்சியப்பாதையில் நெரிஞ்சி முட்களாகவும் ஊசிக் கற்களாகவும் தறுதலைத் தனமாகத் தலைநீட்டி தொல்லை கொடுக்கும் ஊராரின் நம்பிக்கையில் மண்ணைப் போடுவது என்ற திட்டம் பிறந்தது. சாதாரணமாகவே இன்பம் அனுபவித்த அவர்களுக்கு இந்தயோசனை மிகமிக ருசிகரமாயிருந்தது, பாயசத்தில் சர்க்கரையும் சேமியாவும் அதிகமானது போக கற்கண்டும் ‘கிஸ்மிஸ் பழமும்’ கூடச் சேர்ந்து இனித்ததுபோல! அதன் பயனாக ஒரு நாள் ஓடுகின்ற ரயிலில் உற்சாகம் மிக்க ஒரு ஜோடி இன்பப் பிரயாணிகள் அதிகமாயினர்.

குமாரி கனகாம்பரம் கனவு கண்டாள். அவளது இன்பக் கனவுகளின் அஸ்திவாரமாக அவனையே நம்பியிருந்தாள். அந்த மயக்க நிலையில் அவள் அவனைச் சந்தேகிப்பது எங்ஙனம்? ருசித்த பிறகு தானே ஹோட்டலில் காப்பி என்று கிடைப்பது காப்பி எனும் பெயர் பெற்ற ஏதோ ஒரு திரவ பதார்த்தமே தவிர, (கிட்டத் தட்ட தண்ணியே தவிர!) வேறு சுவையான காப்பியல்ல என்று புரிந்துகொள்ளமுடிகிறது! வாழ்க்கை அனுபவமும் அப்படித்தான். அனுபவித்த பிறகு தான் உண்மை உதயமாகிறது. அனுபவச் சூடு வேறு ரகமான பொறிகளைச் சிதறும் நிலைக்குக் கொதிப்புற்றும் விடுகிறது. அவளுக்கு நேர்ந்தது அதுதான்.

வண்ணக் கோலங்கள் திகழும் வான வளையத்தைத் தொடும் கனவுகளென இனிமையாய் நெளிந்து வளைந்து தனிநடம் பயிலும் பட்டங்கள் போல. இனிய நினைவுகளாக நீளும் இன்பத் திட்டங்கள் இட்டு எதிர்காலம் பற்றி எண்ணி மகிழ்ந்தவளை ஏங்கவிட்டு ஓடி மறைந்தான் அவன். ஊர்க்காரர்கள் நம்பிக்கையிலே மண் போட்ட அவள் நம்பிக்கையையே மண்ணாக்கிவிட்டான் மாணவன்!

காதல், ஓருயிர், கண்ணே, மணியே, காதே மூக்கே, குஞ்சாலாடே, கஞ்சாப் புகையே என்ற ரீதியில் - காத

லர்க்கே உரிய தனித் தமிழ் பாஷையில் - அவர்கள் தங்கள் அன்பையும் ஆசையையும் கொட்டியவர்கள் தான். அதற்கு சாட்சியாக பல கடிதங்கள் பின்னர் அகப்பட்டன. என்ருலும் கூட உண்மை வேறுவிதமாக ஆயிற்று. அஸ்கா போட்ட காப்பி என்று சொல்லி பனை வெல்லத்தைக் கரைத்து மற்றவர்களை ஏமாற்றி, தங்கள் பிஸினஸை வெற்றிகரமாக்கிக்கொள்ளும் சில ஹோட்டல் முதலாளிகள் போலவே அவனும் சுய லாபமே கருத்தாக வாழ்ந்திருக்கிருன். பிரகாசம் மிக்க எலெக்ட்ரிக் விளக்குகளும் அற்புதமான 'மேக்அப்'பும் காமிராவும் சேர்ந்து அதியற்புத சுந்தரியாக மின்னச் செய்கிற சினிமா சிங்காரியின் உண்மை லட்சணம் நேரிலே அவளைப் பார்த்தால் அம்பலமாகி விடுவது போல், அவனது சுய ரூபம் தனியாக வந்ததும் தான் கனகாவுக்குப் பளிச்செனப் பட்டது. அவன் அவளை தவிக்கவிட்டு ஓடி மறைந்த பிறகுதான்! தன்னைத் தட்டிக் கழிக்க அவன் செய்த சூழ்ச்சி தாஞே ஊர் விட்டு ஊர் மாறித் தனி வாழ்வு தொடங்கும் திட்டம் என்ற ஐயம் கூட எழுந்தது அவள் உள்ளத்தில்!

அவன் திறமையாகவே செயலாற்றியிருந்தான்! அவளுக்குச் சந்தேகம் அணுவளவேனும் எழாத முறையில் நடந்து ஆசையை வளர்த்து வலையில் விழச்செய்து பின் நட்டாற்றிலே கைவிட்டு நழுவிய அவனை நடிப்புக் கலை வல்லுனன், சாதுர்ய மேதை என்று எவ்வளவு வேண்டுமாஞலும் பாராட்டலாம்.

அவர்கள் நாகரிகம் அலைமோதும் அந்த நகரை அடைந்ததும் அவன் ஹோட்டல் ஒன்றில் தங்குவதற்கு அறை ஒன்று அமர்த்திக்கொண்டான். கடைசி இரவை – புது வாழ்வின் முதல் இரவு என்ற மகிழ்வில் திளைத்திருந்த - அவளுடன் மஞேகரமாகக் கழித்தவன் அதிகாலையில் அவள் விழிப்பதற்கு முந்தியே எழுந்து ஜாக்கிரதையாக வெளியேறியவன்தான். ஒரேயடியாகக் கம்பி நீட்டி விட்டான்!

அவள் ஆனந்த நினைவுடன் எழுந்தாள். அவன் வருவான் என்று காத்திருந்தாள். நேரம் ஆக ஆக அவளுக்குக் கவலை எழுந்தது. பின் பயம் வளர்ந்தது. அவளுக்கு

அழுகை அழுகையாக வந்தது. வேறொன்றும் ஓடவில்லை. சாப்பிட வேண்டும் என்ற எண்ணம் கூட எழவில்லை. படுக்கையில் விழுந்து கண்ணீர் வடித்துக்கொண்டே கிடந்தாள். கொதிக்கும் நீரால் பச்சை மா இட்டலியாக வெந்து விடுவது போல், நினைவுக் கொதிப்பால் அவளது பச்சிளம் உள்ளம் வேதனையாக வெந்தது. என்ன செய்வது? இனி எங்கே போவது? - அது தான் அவள் பிரச்னை.

ஊர் புதிது. அங்கு யாரையும் அவளுக்குத் தெரியாது அவள் துணிந்த நவயுவதிதான். என்றாலும் பெண். வெளியூர்களுக்குச் சென்றவள் அல்ல. அதிலும் இந்த எக்கச் சக்கமான நிலை அவளை வாட்டி வதக்கியது. அவள் அழுது கொண்டே கிடந்தாள்.

நேரம் ஓடியது. மத்தியானம் கழிந்து மாலையும் வந்தது. அவள் உள்ளம் கூட வரண்டுவிட்டது. இனி என்ன செய்வது? ஊருக்குப் போகலாமா? சொந்த ஊருக்கே திரும்பிவிடலாமா? - இந் நினைவு முளைவிட்டு வேகமாய் வளர்ந்து அப்படிச் செய்வதே நல்லது என்ற முடிவு விளையும்படி செய்தது. நல்ல வேளை! அவள் கையில் கொஞ்சம் பணம் இருந்தது. அவ்விஷயத்தில் அவள் புத்திசாலித்தனமாக நடந்துகொண்டாள்! தான் சேர்த்து வைத்த பணத்தை எடுத்துவர மறக்காத அவள் அதை அவனிடம் கொடுக்கவிரும்பாமல் தானே வைத்துக்கொண்டது சமயத்துக்கு உதவியது.

ஹோட்டல் அறையை காலி செய்து விட்டு ஏதோ கொஞ்சம் டிபன் சாப்பிட்டு விட்டுக் கிளம்பிய அவளுக்கு பயம்தான் அதிகரித்தது, இருட்டும் நேரம். தனியாக ஸ்டேஷன் போய் சேர வேண்டுமே! சோகமும் கவலையும் பயமும் குழப்பும் உள்ளத்துடன் நடந்த கனகாவுக்கு நடை எவ்வவில்லை. தளர்வுடன் அசைந்தாள். அவள் எதிரே காலி வண்டியாக ஒரு ஜட்கா வந்தது. ஜட்காவாலா அவளையே கவனித்து வந்தான். அவளையே நெருங்கியதும் 'என்னம்மா. எங்கே போகணும்?' என்று கேட்டான். அவள் நிமிர்ந்து பார்த்தாள். அந்த வண்டிக்காரன் தோற்றம் அவளுக்கு பயத்தையே தந்தது. அவள் பேசாமல் நடந்தாள். அவன் விடாமல் 'என்னம்மா, வண்டி வேண்டாமா?

ஸ்டேஷனுக்குத் தானே?' என்று கேட்டான். அவள் 'ஆமா' என்று மட்டும் சொல்லிவிட்டு நடக்கவும் அவன் 'சும்மா வண்டியிலே ஏறுங்கம்மா. வாடகை ஒண்ணும் அதிகமில்லே, ஆறணு தான்' என்முன்.

இருள் வேகமாகக் கவிந்து கொண்டிருந்து. நடையிலேயே ஸ்டேஷனை அடைய வெகு நேரம் பிடிக்கும். தனிமையில் அவ்வளவு தூரம் நடக்கவும் அவளுக்கு பயமாயிருந்தது. சோர்வு வேறு. ஆகவே, அந்த வண்டியில் ஏறிஞள்.

ஜட்காவாலா வண்டியை திருப்பிஞன். அவனைப் பார்க்கும் பொழுது அவளுக்கு அர்த்தமற்ற கலவரம் ஏற்பட்டது. அவனுக்கு வயது இருபத்தெட்டுக்குள் தானிருக்கும். கில்லாடியாகக் காட்சியளித்தான், எதற்கும் துணிந்தவன் அவன் என்பதை அவன் பார்வையும் முகமும் கூறும். அவளுக்கு அவன் வண்டியில் ஏறியதிலிருந்து மனம் திக்திக்கென்றது. மன வேதனையுடன் ரோட்டைப் பார்த்தபடியே மௌனமாக உட்கார்ந்திருந்தாள். பின் என்ன செய்வது? அவளது மோனநிலையைக் கலைத்தது வண்டிக்காரனின் கேள்வி.

அவன் கேட்டான்: 'அம்மா. நீங்க எந்த ஊருக்குப் போகணும்?' அவன் பேச்சில் தொனித்த மரியாதை அவளுக்கு திருப்தியளித்தது. அவள் ஊர்ப் பெயரைச் சொன்னுள்,

'உங்களுக்கு இந்த ஊர் தானும்மா?'

'இல்லே, சொந்த ஊரே அது தான்' என்ருள். பின் அவன் 'இங்கு எப்போ வந்தீக? என்ன ஜோலியாக எங்கே வந்தீக? தனியாக வா? ஏன் தனியா தூரா தொலைக்குக் கிளம்பியிருக்கீங்க?' என்று கேள்விகளை அடுக்கியது அவளுக்கு தொல்லையாகத் தோன்றியது. ஏதோ பதில் சொன்னுள். அவள் மழுப்புகிருள் என்பதை அவனுல் புரிந்துகொள்ளமுடியாதா என்ன!

'அம்மா, நான் ஒண்ணு சொல்றேன். நீங்க பொய் பேசுதீங்க என்கிறது உங்க பேச்சிலேயே நல்லத் தெரியுது. பொய் பேசுகிறது நல்லாயில்லேங்கிற விஷயம் கிடக்கட்டும். அசலூரிலே பொய் சொல்றது' ஆபத்துலே கொண்டாந்து விட்டுடும். ஆமா, நான் சொல்லிப்போட்டேன்!' என்று போதித்தான் அவன், பெரிய யோக்கிய சிகாமணி போல.

'இவ்வளவு தூரம் ஏன் சொல்றேன்னு உங்களைப் பார்த்தா இரக்கமாயிருப்பதனாலே தான், நீங்க ஏதோ பெரிய துன்பத்திலே அடிபட்டிருக்கதாகத் தெரியுது, அதை உங்க முகமே சொல்லுதே. அதனாலே உங்களுக்கு ஏதாவது உதவி கிதவி தேவையிருக்குமோ என்ன வோன்னு கேட்டேன். இல்லேன்னா எனக்கு என்ன வந்தது!' என்று உலக விவகாரத்தையே மறந்து விட்டு பரோபகார நோக்கில் வாழ்கிற ஞானி மாதிரி பேசினான்.

அவன் சொல்லிய தினிசு அவளுக்கு அவன் மீது நம்பிக்கை ஊட்டியது. மேலும், தன் துயரத்தை வெளியே சொல்லி ஆற்றிக் கொள்ள வேண்டும் போலிருந்தது. அதனால் அவள் நடந்த கதை முழுவதையும் அவனிடம் விளம்பினாள். அவன் கள்ள நினைவு துள்ளிக் குதித்து கூத்தாடத் தொடங்கியது. மேலுக்கு அனுதாப மொழிகளை தாராளமாகக் கொட்டினான். 'ஐயோ பாவம் பூ மாதிரி இருக்கிற உனக்கா இந்தக் கதி வரணும்! அவன் சுத்த முட்டாள் போலிருக்கு. தன் வாழ்வே பெரிசுன்னு நினைக்கிற தறுதலையாக யிருப்பான்னு நினைக்கிறேன். என்ன இருந்தாலும் இப்படி அசலூரிலே கொண்டு வந்து நடுத்தெருவிலே விட்டுட்டுப் போறது மனிசத்தனமா? என்னம்மா நீ இதை யெல்லாம் முதல்லேயே யோசித்திருக்க வேணும்? இப்போ எவ்வளவு கஷ்டம் பாரு! இன்னும் ஊருக்குத் திரும்பிப் போயி..... ஐயோ, பாவம்!' என்று பெருமூச்செறிந்தான். அவன் தாராளமாக 'நீ' என்று மாற்றிப் பேச ஆரம்பித்தது முதலில் அவளுக்கு சுறுக்கென்று பட்டது, ஆசையுடன் அன்னத்தை விழுங்கும் போது நறுக்கெனக் குத்தும் கல்போல. அவனது 'இரங்கற்பா' அவள் மனதைத் தொட்டதால் மௌனமானாள்.

ஜட்காவாலா மனதில் வளர்ந்த இருள் நினைவு போலவே வெளியுலகிலும் இருட்டு கவிந்தது. அது அவனுக்கு சௌகரியமாயிற்று. அவள் நினைவு போல வண்டி ஓடிக்கொண்டு தானிருந்தது. அவள் சோகத்தில் ஆழ்ந்து கிடந்ததால் ஜட்கா எப்படிச் செல்கிறது என்பதை கவனிக்கவில்லை. திடீரென்று 'இறங்கு!' என்ற முரட்டுக் குரலின் அதிகாரம் அவளை உலுக்கி விழிக்கச் செய்தது. அவள் பார்த்தாள். திகிலுடன் முன்னால் பார்த்தாள். பிறகு அங்குமிங்கும் பரக்கப் பரக்க விழித்தாள்.

'என்ன முழிக்கிறே? இறங்கு' என்று அதிகாரம் செய்தான் ஜட்காவாலா. அதில் எவ்வளவோ உணர்ச்சிக் கலவைகள் இழைந்து விழுந்தன!

அவளுக்கு எங்கோ 'கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டது போல்' இருந்தது. 'பதநீர்' என்று பருகிவிட அது கள்ளின் புளிப்பு உற்றதாகி போதைக் கிறுகிறுப்பு கொடுக்கவே மயக்கம் எழுவது போலத் திண்டாடினாள் அவள். 'என்ன இது! எங்கே கொண்டு வந்திருக்கே? ஸ்டேஷனையே காணோமே!' என்று பதட்டமாகக் கேட்டாள் அவள். பெரிய ஓட்டப்பந்தயத்தில் ஈடுபட்டுவிட்டுக் கீழே சாய்தவனின் நெஞ்சு போல் 'திக்திக்' கென்று அடித்தது அவள் மனம், அவளுக்கு அழுகைதான் பொங்கியது. தனது நிலையை எண்ணித் தன்னையே நொந்து கொண்டாள் 'இந்தா பாரு' ஒழுங்கா ரயில்வே ஸ்டேஷனுக்கு ஓட்டிட்டுப் போ, வீணா வம்பு பண்ணாதே, அப்புறம் உதவிக்கு ஆள் வரும்படி கூச்சல் போடுவேன்' என்றாள் மிரட்டும் நோக்கத்துடன். என்றாலும் அவளுக்கு அளவற்ற அச்சம்.

அவன் பயப்படுகிறவனா என்ன! 'அடியாத்தேன்னாளாம்! ஐயோ! நீ பெரிய புத்திசாலிதான். அது தான் தெரியுதே! இறங்கு கீழே' என்று அவளையே மிரட்டினான் அவன்.

அந்த இடம் ஆள் நடமாட்டம் அற்றிருந்தது. ஓய்ந்து கிடக்கும் ஏதோ ஒரு தெருவிலும் கூட ஒதுங்கிப் போன பழைய வீடு ஒன்றின் தோட்டம் மாதிரித் தோன்றியது.

அவளை பயம் ஆட்டி எடுத்தது. உடல் வியர்த்துக் கொட்டியது. கூச்சல் போட்டாலும் பலன் ஏற்படாது என்பதை உணர்ந்ததும் அவள் நடுங்கிப் போனாள். மௌனமாக வண்டியிலே உட்கார்ந்திருந்தாள்.

'அடி பொட்டி மவளே! பத்தினிமாதிரி பிகுபண்ணுறியேடி. வீட்டுக்குத் தெரியாமே எவனையோ இழுத்துக்கிட்டு ஓடி வந்த போது உன் பத்தினித் தனம் எங்கேடி போச்சு?' என்று கனைத்து அவளை 'லபக்'கென்று பற்றி இழுத்து கைகளில் தூக்கினான் அவன். அவள் கூச்சலிட்டாள். கைகளால் அடித்தாள். கால்களால் உதைத்தாள். அவன் அவள் வாயில் துணியைத் திணித்துவிட்டு கைகளையும் கால்களையும் அசைக்கமுடியாதபடி இறுக்கிப் பிடித்தபடி அணைத்து உள்ளே தூக்கிச் சென்றான்.

அது குதிரை வண்டி நிறுத்தும் இடம்போலிருந்தது. ஒரு மூலையில் புல் குவிந்து கிடந்தது. அதைக் கால்களால் பரப்பி குமாரி கனகாம்பரத்துக்கு காருண்யத்துடன் பச்சைப் புல் மெத்தையாக்கினான்! அந்த அபாக்கிய மலர் முரட்டு வண்டின் வெறிக்கு விருந்தாக வேண்டியது தவிர்க்கமுடியாதது ஆயிற்று.

இளம் வண்டு காதல் பாஷை பேசி, மலர்ந்து நின்ற புஷ்பத்துடன் உறவாடி இன்பத்தேன் உண்டு திகட்டியதும் தனியாகவிட்டு ஓடியதால் வதங்கிய பூ தென்றல் என எண்ணிச் சிலிர்க்க, அது கொடியசூறைக்காற்றுகிவிட்டதை உணர்ந்து வாடியது! கனகாம்பரம் புழுங்கினாள். தன்னையே வெறுத்துக்கொண்டு அழுது குமைந்தாள். வடுப்பட்ட அவள் உள்ளம் அவளை வஞ்சித்த காதலனையும், ஏமாற்றிய ஜட்காவாலாவையும் சுடு நினைவால் திட்டிக்கொண்டிருந்தது. அவள் அழுதுகொண்டே கிடந்தாள்.

அவன் ஜாலியாக உதடுகளைக் குவித்து விஸில் அடித்தபடியே வெளியேறினான். போகும்போது கதவுகளைப்பூட்ட அவன் மறக்கவில்லை. ஜட்காவின் உருளும் சக்கர ஓசை வெடிப்பது போல் அடித்த அவள் இதயத் துடிப்புபோல் அலறியது. குமுறிப் புழுங்கிய அவள் அழுதபடி கிடந்தாள்.

எவ்வளவு நேரம் போயிருக்குமோ தெரியாது. அழுது அழுது அந்தச் சோர்விலேயே தன்னையறியாமல் அவள் தூக்கத்தைச் சரணடைந்துவிட்டாள். பிறகு திடீரென்று நடுங்கிப் புரண்டு எழுந்த போது, அவளை யாரோ பலமாக உலுக்குவது போலிருந்தது. கண்ணைக் கசக்கிக்கொண்டு பார்த்த போது அவனே தான்! — ஜட்காவாலா!

கொஞ்சுதலாகச் சிரித்தபடி 'என் ரோஜாப்பூ அப்படியே தூங்கிட்டுதாக்கும்! சாப்பிடக் கூட இல்லியே பசிக்குமே, பாவம் என்ற நினைப்பு வரவே விழுந்தடித்து ஓடிவந்தேன். இந்தா கண்ணு!' என்று உபசரித்தான். மங்கலாக எரிந்த விளக்கின் ஒளியில் அவன் பேய் போல் காட்சியளித்தான் அவளுக்கு. அவன் மூஞ்சியும், பரட்டைக் கிராப்பும் அவனும்!

குமாரி கனகாம்பரம் வாய்திறக்கவே யில்லை. 'என்ன, ரோஜாப் பூ பேசவே மாட்டேன்குது? ரோஜா' உன் பேர் என்னடி? எல்லாம் சொன்னே! அதைச் சொல்ல மறந்துட்டியே...சொல்லடிகண்ணு!...சொல்லமாட்டியா? ஊங்... ஊங்? நீ ரோசாவே தாண்டி! எவ்வளவு லெட்சணமா யிருக்கே! ஐய்யோ!...' என்று சொக்கிப் போனான் அவன். அவன் சுயநிலையில் இல்லை, 'தண்ணி' வேறு வேலை செய்கிறது என்பதை அவனிடம் நிலவிய வாடை அவளுக்குப் புரிய வைக்கவும் அவள் அதிகம் பயந்தாள். நவயுவதி தான் என்றாலும் 'கடவுளே! என்விதி இப்படியா அமைய வேணும்!' என்று நொந்து கொள்வது தவிர வேறொன்றும் ஓடவில்லை.

அவள் பெருமூச்சு கடவுளைத் தொட்டுவிடுமா என்ன?



# 9

## குஞ்சாலாடு

குமாரி கனகாம்பரம் ஜட்காவாலாவின் ரோஜாப்பூ வாக மாறியதுடன் அவளது வாழ்வின் மறுமலர்ச்சி நின்றுவிடவில்லை. அவளை காலம் குஞ்சாலாடு என்றுவேறு மலர்ச்சி பெறச் செய்தது!

கனகாவின் வாழ்க்கையைச் சோக மயமாக்கிய காலச் சூறை அதை அடியோடு சீர்குலைக்கக் கங்கணம் கட்டி விட்டது போல் காரியங்கள் நிகழ்ந்தன, கனகாம்பரம் 'அட கடவுளே' என்று அலுத்துக்கொண்டு மூலையில் கிடந்து அழ விரும்பினாலும், காலமோ கடவுளோ அவ ளுக்குத் துணைபுரியவில்லை!

ஜட்காவாலா கணபதியப்பனின் 'ரோஜாப்பூ'வாக மூன்று தினங்கள் அவள் வாழ்வின் கொடுமைகளை அனுப வித்தாள். அவற்றை விடக் கொடிய வருங்காலம் அவளுக் குத் காத்திருந்தது. அதை அவள் ஆரம்பத்தில் உணர வில்லை. இருள் நிறைந்த அந்த வாழ்வுப் பாதையில் அவ ளைத் தறிகெட்டுத் திரியும்படி வழிகாட்ட வந்து சேர்ந்த தூதுவனாகத் தோன்றினான் காத்தலிங்கம்.

குமாரி மாணவனின் காதலி என்ற நிலை போய் கறை பட்ட மலராகி மூன்று நாட்கள் ஓடிய பிறகு, நான்காவது நாள் காலையில் வந்துமுளைத்தான் காத்தலிங்கம், அவளைக் காக்க வந்த கடவுளின் அவதாரம் போல,

அப்பொழுது காலை மணி ஒன்பது ஒன்பதரை மணி ரயில் வண்டியை 'பார்த்துவிட்டு வர' போயிருந்தான் ஜட் காவாலா. சில தினங்களாகி விட்டதினால் அவன் கதவுக ளைப் பூட்டுவதில்லை. மேலும் அவள் தப்பி ஓட முயன்றா லும் தன் திருஷ்டியை விட்டு நழுவ முடியாது என்ற துணிவுடன், அப்படி அவள் ஓடத் துணியமாட்டாள் எனும் நம்பிக்கையும் அவனுக்குப் பிறந்திருந்தது.

'அம்மா' என்று கூப்பிடும் குரல் கேட்டு வெளியே எட்டிப் பார்த்தாள் 'ரோஜாப்பூ.' கணபதியப்பன் வர்ணனை மூலம் அவளைப் பற்றி ஒருவாறு கற்பனை செய்திருந்த காத்தலிங்கம் அவளை நேரில் கண்டதும் 'அட, லட்டுன்னு லட்டுதான்!' என்று சொக்கிப் போனான், அவன் கையிலும் லட்டுப் பொட்டணம்தான் இருந்தது.

'இந்தாம்மா, இதை வாங்கி வை. அவரு உன்கிட்டே கொடுத்துவிடச் சொன்னாரு!' என்று சிரித்தபடி நீட்டினான்.

'என்னது?' என்று கேட்டவண்ணமே நீண்ட கைகளில் வேண்டுமென்றே விரல்கள் பதியும்படி அதை அமுக்கி வைத்து 'குஞ்சாலாடு! அதுதாலே உனக்கு ரொம்பப் பிடித்திருக்குதாம்! அவரு உன்னைப் பத்தியும் உன் அழகு, உன் ருசி எல்லாவற்றைப் பத்தியும் எல்லாரிடமும் பேசிப் பேசி மகிழ்ந்து போறாரே. அவரு தான் வாங்கி அனுப்பினாரு. இன்னைக்குத் திரும்பி வர சாயங்காலம் ஆகுமாம்' என்றான்.

அது வாஸ்தவமாக இருக்கலாம். ஆனால் 'ஸ்வீட்' பார்சல் கணபதியப்பன் வாங்கி அனுப்பியதல்ல. அவன் புகழ் பாடும் 'ரோஜாப்பூ'வைத் தரிசிக்க வந்த காத்த லிங்கத்தின் காணிக்கை தான் அது. அவன் தனது குணத்தை நைசாகக் காட்டத் தொடங்கினான்.

'ஆமா, இவ்வளவு அழகாக இருக்கிற நீ இவனிடமா வந்து சிக்கணும்! வண்டி ஓட்டிப் பிழைக்கிற பய. அன்றாடம் ஏதாவது கிடைத்தால் தான் உண்டு. இல்லேன்னா பட்டினி கிடக்க வேண்டியது தான். ராசாத்தி மாதிரி இருக்கிற உன்னை இந்தக் காஞ்சமிர்தார் எப்படிக் காப்பாத்தப் போறான்? நான் சொல்லுறேன் கேளு. பேசாமே உன் ஊரைப்பார்த்துப் போ, அங்கே உள்ள பெரியவங்க காலிலே விழுந்து அழு. தெரியாத்தனமாச் செய்ததை யாரும் மன்னிக்கமாட்டேனென்று சொல்லு வாங்க, கிளியாட்டமுள்ள நீ இந்தக் கடுவன் பூனை கிட்டே வந்து...'

அவன் பேச்சு அவளுக்கு நம்பிக்கை அளித்தது. துணைக்கு யாருமில்லையே என்று ஏங்கிக் கிடந்த குமாரி

தான் வஞ்சிக்கப்பட்ட கதையை அறிவித்தாள். தன்னை அந்த 'ஜெயிலிலிருந்து' தப்புவித்து அந்தக் குடிகாரனிடமிருந்து மீட்டுவிட வேண்டும் என்று கெஞ்சினாள்.

'பாத்தியா, பாத்தியா, பாத்தியா! அந்தப் பயல் என்னைக் கூட ஏமாத்திப் போட்டான் பாத்தியா!' என்று தலையிலடித்துக் கொண்டான் மிஸ்டர் கா. லிங்கம். 'பாரு, அவன் என்னிடம் அளந்தான். நீ அவனோட அத்தை மகள் என்றும், வீட்டிலே உள்ளவங்க உன்னை வேறு யாருக்கோ கல்யாணம் செய்து கொடுக்க முனைந்ததால், நீ அதை விரும்பாமல் இவனைத் தேடிவந்ததாகவும் சொன்னானே. 'ரேரே ஆண்டவா! இந்த உலகத்திலே என்னென்ன ஏமாற்றுகள் நடக்குதாப்பா!' என்று மறுபடியும் தலையிலடித்தான் அவன்.

உலகை உய்விக்க வந்த உத்தமன் மாதிரி பாவித்துக் கொண்டு மிஸ்டர் கா: லிங்கம் பேசினான்: 'உலகம் ரொம்பக் கெட்டுப் போச்சு. இப்போ யாரையுமே நம்பறத்துக்கில்லே. நான் ஜட்கா வாங்கிக் கொடுத்து பிழைக்கும் வழிதேடிக் கொடுத்த இந்தப்பயல் என்னிடமே உடான்ஸ் விட்டிருக்கானே பாத்தியா, பாத்தியா, பாத்தியா!' மீண்டும் தலையில் அடிப்பு! 'ஏ பொண்ணு! இந்த எத்துவாளிப் பய கூட நீ இனிமேல் ஒரு க்ஷணம் கூட இருக்கப் படாது. என்ன நான் சொல்றது? நானாச்சு உன்னைக் காப்பாத்த. சரி புறப்படு உடனே. சமயத்தைப் பயன் படுத்திக் கொள்ளணும். உன்னை ஊரிலே கொண்டு சேர்க்கிறது என் பொறுப்பு. இன்னைக்கோ நாளைக்கோ ரயிலேற முடியாது என்னு, இந்தப்பயலோட ஆட்கள் கழுகுக் கண், ஆந்தைக் கண் போட்டு பார்த்துக்கிட்டிருப்பாங்க. நம்ம டாபாய்ச் சிட்டோம்னு தெரிஞ்சுதுன்னு கூடக் கொஞ்சம் அலை வாங்க. ஆனால் பயபடாதே. நானாச்சு! இதுலே ரத்தம் சிந்தினாலும் சரி. இந்தப் பய, பாத்தியா பாத்தியா பாத்தியா! என்னையே ஏமாத்திப் போட்டான்! ரெரேரே ஆண்டவனே, அல்லாவே. பரமசிவம்! பாத்தியா பாத்தியா பாத்தியா! உலகம் ரொம்பக் கெட்டுப் போச்சு. ரொம்ப ரொம்பக் கெட்டுப்போச்சு...!'

இப்படி அந்த 'மகா யோக்கியர்' உலகம் அறியாக்குமாரியுடன் பேசி நம்பிக்கை யூட்டி அவளை அழைத்துச் சென்

ருன். ஆள் நடமாட்டமில்லாத சந்து பொந்துகள் வழியாக இட்டுச் சென்ருன். 'இல்லேன்ஞ இந்தப் பயல்களோடெ ஆட்கள் கண்டுபிடித்துவிடுவார்கள்' என்று சொல்லிக் கொண்டான். இறுதியில் அவர்கள் பயணம் ஒரு வீட்டில் போய் முடிந்தது.

சுமாரான அந்த வீடு அவன் சுமாரான பணக்காரன் என்பதைக் காட்டியது. அவள் நுழைந்ததும் என்ன செய்வது என்றறியாமல் நின்ருள். அத் தனி வீட்டிலே அவன் மட்டும் தான் வாழ்ந்தான் என்பது நன்கு புரிந்தது. அவளுக்கு உள்ளக் கலவரம் இல்லாமல் இல்லே. அடுத்த அறையினுள் சென்றிருந்த அவன் திரும்பி வரும்போதே 'பாத்தியா. பாத்தியா, பாத்தியா ! இன்னும் நின்னுக்கிட்டிருக்கியே! உட்காரு. கையிலே அதுஎன்ன?' என்று விசாரித்தான்,

'குஞ்சாலாடு' என்ருள் குமாரி.

'பாத்தியா, பாத்தியா, பாத்தியா! மறந்தே போனேன். குஞ்சாலாடு... நல்ல பேரு! உன் பேரு குஞ்சாலாடா ? அடடா, பேரே இனிக்குதே! குஞ்சாலாடு! பாத்தியா, பாத்தியா, பாத்தியா! என்ன அருமையான பேரு! அடடா! குஞ்சாலாடு!'

அவன் கொஞ்சம் லூஸ் போலும் என்று நினேத்தாள் அவள். இந்தப் பைத்தியத்தைவிட்டு எப்பொழுது போகலாம் என்ற தவிப்பு ஏற்பட்டது அவளுக்கு. அவன் ஒரு நாற்காலியில் உட்கார்ந்தபடி 'ஹலோ மிஸ். குஞ்சாலாடு. கம் ஆன் ஸிட் டவுன்!' என்று சைகை செய்தான்.

அவள் தயக்கத்துடன் 'என் பெயர் குஞ்சாலாடு இல்லே' என்று மென்று விழுங்கிஞள்.

'ஓ! பாத்தியா, பாத்தியா, பாத்தியா! என்னவோ ஸொல்றியே. நெவர் மைண்ட், மிஸ் கு. லாடு! நான் மிஸ்டர் கா. லிங்கம், யூ ஸீ! என்ன ஜோடி! என்ன சந்திப்பு!' என்று கொஞ்சலுடன் அவள் அருகில் நெருங்கிஞன். உருளேக் கிழங்கு பொடிமாஸைச் சுவைத்துக் கொண்டிருக்

கும் போதே பச்சை மிளகாய் கடிபட்டு சுரீரென்று தாக்கி கண்களில் ஜலம் தேங்கச் செய்வது போல, அவளுக்கும் நெருக்கடி ஏற்பட்டது.

'ஐயா...நீங்கள்...' என்று ஆரம்பித்தவள் உதடுகள் அதற்கு மேல் அசையவில்லை அசைய விடவில்லை அவன்! தன் உதடுகளால் அடக்கு முறை விதித்தான் கடினமாக! 'பாத்தியா பாத்தியா பாத்தியா! மிஸ் கு. லாடு, என்னை மிஸ்டர் கா. லிங்கம் என்று கூப்பிடு. ஓ டீயர் என்று கூப்பிடு. வேறு எப்படி வேண்டுமானாலும் கூப்பிடு. ஐயா என்று வேண்டவே வேண்டாம்!' என்று அவளை இழுத்துக் கொண்டான். எதிர்பாரா மாற்றங்களாலும் ஏமாற்றங்களாலும் செயலற்று நின்ற அவள் அந்த ருத்திராட்சப் பூனை கையில் சிக்கிய சிறு எலியானாள்.

காத்தலிங்கம் காத்தருள் புரிய வந்தது கூட கணபதியப்பனின் சூழ்ச்சி தான் என்பது குமாரிக்குப் புரியாமல் போகவில்லை, மறுநாள் அங்கு ஆஜரானான் ஐட்காவாலா. அழுது புழுங்கிக் கொண்டிருந்த அவள் அவனைக் கண்டதும் திடுக்கிட்டாள்.

'என்ன மிஸ் கு. லாடுவைக் காண வந்தியா மிஸ்டர் அப்பர்?' என்று வரவேற்றான் காத்தலிங்கம். அவன் புரியாமல் விழித்தபடி 'என்னது, மிஸ் கு. லாடு வா? அது என்னதுடா அது!' என்று கேட்கவும், நண்பன் தலையிலடித்துக்கொண்டான்: 'பாத்தியா, பாத்தியா, பாத்தியா! நம்ம இவ தான் குஞ்சாலாடு!'

கணபதியப்பனுக்கு சந்தோஷம் பொறுக்க முடியவில்லை. 'ஒஹ்ஹொஹோஹோ! குஞ்சாலாடு கொடுத்து அழைத்து வந்த நினைவுச்சின்னமோ? ஹொஹ்ஹொஹோஹோ' என்று கனைத்தான். லிங்கமோ அவசரம் அவசரமாக 'பாத்தியா!' பல்லவி பாடி விட்டு 'இல்லை யில்லை யில்லை! அவ லட்டுன்னு லட்டு தான். குஞ்சாலாடு. அடடாடா! மிஸ் கு. லாடு! வெரி பூட்டிபுல்! ஒண்டர்ஃபுல்!' என்று கொக்கரித்தான்.

'இப்படியாகத் தானே' குமாரியை மூலதனமாக்கி அவர்கள் சூழ்ச்சிகரமாகத் திட்டமிட்டு தொடங்கிய

'பிஸினஸ்' வெற்றிகரமாக 'ரன் பண்ண' ஆரம்பித்தது. அவள் பாடு தான், ஐயோ!

ஆனால் காலம் அவள் மனதை கல்லாக்கிவிட்டது. அனுபவம் அவளுக்கு துணிச்சல் கொடுத்தது, 'பாவமாவது புண்ணியமாவது! கடவுளாவது கத்தரிக்காயாவது! இந்த உலகிலே அதையெல்லாம் எதிர்பார்த்தால் கட்டி வராது. இந்த எத்தர்களைப் போல எதற்கும் துணிந்துவிட வேண்டியது தான்!' என்று தனது 'பாலிஸியை' வரையறுத்துக் கொண்டு புது வாழ்வு தொடங்கிய குமாரி கனகாம்பரம் மிஸ் குஞ்சாலாடு ஆகவே மாறிவிட்டாள்!



# 10

## திறந்த ஜன்னல்

நடுத் தெருவில் நின்ற நால்வர் பார்வையில் பட்டது இது தான் :-

சுமாரான வீடு ஒன்றின் திறந்த ஜன்னல் எடுத்துக் காட்டியது உள்ளே ஒயிலாக அமர்ந்திருந்த மங்கை ஒருத்தியை. சிங்கார வலை பின்னி ஒய்யாரமாகக் கொலுவிருக்கும் சிலந்தி போல் ஸ்டைலாக இருந்த அவள் பார்வையில் விழுந்த உடனேயே தெருவில் நின்றவர்களுக்கு ஞாபகம் வந்தது 'குஞ்சாலாடு' என்ற வார்த்தை தான்.

அவளே தான்!

கிருஷ்ண பிள்ளை விவரித்த அவள் புரவோலத்தை அறிந்த விஷ்ணு விளம்பினுர்: 'அது சரி! ஏதோ சுமாரான நிலையிலே இருக்கிருப் போல் தெரியுதே. இவளே ஏன் கடைக்குப் போகணும்? அங்கே அவள் மயங்கி விழுவானேன்? ஆரம்பத்திலே யிருந்து அதுதானே புரியலே!'

'ஆண்டவனே, அது தான் பிஸினஸ் டிரிக் என்று அப்பவே சொன்னேனே! இது தினசரி நாடகமல்ல.சாரமற்றுப் போன சில சமயங்களில்-எப்போவாவது-கையாளப் படும் வியாபார தந்திரம். வலைவீசும் சிலந்தி ஊசலாடி எதையாவது பற்றிக்கொள்ள துடிப்பது போல் தான்' என்று விளக்கினுர் விஷயம் அறிந்தவர்!

'அப்படி யென்ருல் அவள் மயங்கி விழுந்தது கூட...' விஷ்ணு சந்தேகம் பூராவையும் சொல்லாக்குவதற்குள்ளாக கிருஷ்ண பிள்ளை முடித்தார்: பம்மாத்தாகவே இருக்கலாம்! இப்போ யாரையும் எதையும் நம்புவதற்கில்லையே!'

சிறிது நிலவிய மௌனத்தைக் கலைத்து மீண்டும் தொடர்ந்த மனித ஐந்து கூறியதன் சாரம் இதோ :

'ஒரு வேளை ஜாவியாக ஹோட்டல் சப்ளையர் கத்தியதை இவள் தன்னைக் குத்திக் கிண்டல் பண்ண உதிர்த்த பேச்சாக எண்ணி, திகைத்து, உணர்ச்சிப் பெருக்கால் மயங்கியிருந்தாலும் இருக்கலாம், அல்லது. அவன் உண்மையாக இவளையே கேலி செய்து, அதை உணர்ந்து வெட்கிய நிலையில் அம் மயக்கம் நிகழ்ந்தாலும் நிகழ்ந்திருக்கலாம்.'

ஏ, நிறுத்து! நீ பேச வாய்திறந்தால் வழவழன்னு வெண்டைக்காய்த்தனம் பண்றியே!' என்று கோபித்தார் மிஸ்டர் சிவன். அவருக்கு மறுப்பு விடுவது பற்றி மனிதப் பிராணி யோசிப்பதற்குள், அதை மறக்கும்படி காரியங்கள் நிகழ்ந்தன.

திறந்த ஜன்னல் காட்டியது: அவள் முன் ஒரு உருவம் நின்றது. ஆண், அவனே தான். அவளை வண்டி வைத்து அழைத்து வந்த பரோபகாரி தான்! அவன் முக பாவமும், குழைவும் கெஞ்சுவது போல தோன்றின. அவளோ மிடுக்காக அகந்தையுடன் இருந்தாள். 'நான் தான் சொல்லிவிட்டேனே. எத்தனை முறை சொல்றது? எனக்கு முதல்லே பணம் வேணும். பணம் தான் முக்கியம்' என்ற கண்டிப்புக் குரல் அவளது காதுகளில் விழுந்தது.

'இப்போ கொஞ்சம் சில்லரை தானிருக்கு, நாளைக்குத் தாரேனே' என்று பல்லையிளித்தான் அவன்.

'அதெல்லாம் எனக்குத் தெரியாது. நான் சொன்னால் சொன்னது தான்' என்று 'வெட்டு ஒன்று துண்டு இரண்டு' ஆகப் பேசி முடித்தாள் அவள். அவன் கெஞ்சினான், 'குஞ்சு... குஞ்சு! தெருவிலே விழுந்து கிடந்த உன்னை அருமையா...'

அவள் அவனைப் பேசவிடவில்லை. 'தெருவிலா கிடந்தேன்! ஹோட்டலில் அல்லவா விழுந்தேன்! இவ்வளவு நேரம் பொறுத்தாச்சு. இனிமேல் உன் பேச்சைக் கேட்க எனக்குப் பொறுமை இல்லை, உம், போ! வெளியே என்று சீறத் தொடங்கினாள் அவள்.

'ஸேரி! நமக்கும் இங்கு நிற்கப் பொறுமை இல்லை. போவோம் ஸ்வாமிகளே!' என்று கால் வண்ணம் காட்டினார் கிருஷ்ண பிள்ளை. மூவரும் நடந்தனர்.

'சே! உகலம் சுத்த மோசமாக அல்லவா இருக்கிறது! நன்றி விசுவாசம் அன்பு பரோபகாரம் அது இது என்பது ஒரு எழவும் கிடையாது போலிருக்கே. எல்லா விஷயங்களுக்கும் ஒரே அடிப்படை தானு - சுயநலம்! சுயநலம்! சுயநலம்! செச்சே, இந்த மனித ஜந்துக்களைப் போன்ற மட்டமான பிராணிகள் இதுவரை உலகில் இருந்ததே இல்லையே' என்று அலுத்துக்கொண்டார் விஷ்ணு.

'ஸ்வாமின்! நீங்கள் முக்கிய குணக்கோளாறை மறந்துவிடுகிறீர்கள். எல்லாம் உங்கள் திறமையின் பரிபூரணமற்ற பண்பால் விளைவது தான!' என்று சொல்லிச் சிரித்தது மனிதப் பிராணி.



# 11

## விடிந்தது

மங்கலான வெளிச்சம் எங்கும் நிறைந்திருந்த இருளில் கலந்து, வானை வெளிறச் செய்திருந்தது. விடியப்போகிறது என்ற பிரமையைத் தந்தது. வானவளையத்தை விட்டு உயரே தள்ளித் தொங்கியது 'செட்டி வெள்ளி' தன்னை 'விடி வெள்ளி' என எண்ணி ஏமாறுகிறவர்களை நினைத்துச் சிரிப்பது போல் மின்னியது அது. 'டில்லி பாதுஷா. அந்த பகதூர். இந்த ஜான்' என்ற அற்புதமான பெயர்களில் மயங்கி அணுக்களைச் சிதறி வாங்கிய ஹோட்டல் 'இனிப்பு' (ஸ்வீட்) ருசியற்று ஏதோ 'இளிப்பு' என்று விளங்கிவிடுவது போல, திடீரென்று இருள் கனத்தது சிரித்த செட்டி வெள்ளியை மறைத்து.

அவர்கள் நின்றார்கள். 'இனிமேல்?' என்றார் சிவன். 'அப்புறம்?' என்று கேட்டார் விஷ்ணு.

'யதா ஸ்தானத்துக்கு எழுந்தருள வேண்டியது தான்' என்று பிரம்மா அறிவித்தார்.

'அதற்குள்ளாகவா?' என்று ஆச்சர்யப் பட்ட கிருஷ்ணபிள்ளையின் மண்டையிலடிப்பது போல் 'பின்னே!' என்ற ஒரு சொல் மூன்று வாய்களிலிருந்து உதிர்ந்தது.

'இன்னும் எவ்வளவோ உங்களுக்குக் காட்ட வேண்டியிருக்குதே! நீங்கள் பார்த்தது ரொம்ப ரொம்பக் கொஞ்சம்... தானே......

'இப்போ பார்த்ததே உள்ளத்தைக் குழப்புது இன்னும் மேலும் மேலும் பார்த்துக் கொண்டு போனால் உருப்பட்டாற் போல்தான்'— இது விஷ்ணு.

கிருஷ்ணபிள்ளை சிரித்தார். 'விடிந்தது! இவ்வளவு தானு! தன்னம்பிக்கை பெற்ற கலைஞர்கள் இல்லை போலும் நீவிர்!' என வியந்தார்.

'அப்படீன்னு?'

'தான் எழுதிய கதையையே பலமுறை படித்து மகிழும் எழுத்தாளன் போல, தான் தீட்டிய ஓவியத்தைக் கண்டு கண்டு களிக்கும் கலைஞன் போல, உங்கள் சிருஷ்டிகளை நீங்களே பார்த்துப் பெருமைப் பட வேண்டாமா!' அவர் பேச்சில் 'ஏகத்தாளம்' தொனித்தது,

'அதெல்லாம் ஒண்ணும் வேண்டாம். எங்களுக்கு ரொம்ப வேலை கிடக்கு!'

'இதைப் போல கோளாறுன சிருஷ்டிகளை இன்னும் படைத்து, காத்தல் என்னும் பெயரால் திணறடித்து, அழித்தலை மட்டும் அபாரமாகச் செய்வதற்காகவா... ! ஹே!... கொஞ்சம் சினிமா உலகத்தை மட்டுமாவது பார்த்துப் போகலாமே! ஸ்டுடியோ பூமி நீங்கள் கண்டிப்பாய் காண வேண்டிய இடமாயிற்றே!'

கிருஷ்ணபிள்ளைக்கு யாரும் பதில் சொல்லவில்லை. ஆனால் அங்கு மௌனமே நிலவவில்லை. தென்றல் கனத்து ஊளையிடும் காற்றாகி, இரைச்சலுடன் மண்ணைச் சுழற்றி மரங்களை வெளியை அனைத்தையும் சாடுகிற சூறையாகிப் பின் சண்டமாருதம் ஆவதைச் சித்தரிப்பது போல் அங்கு பெரிய குழப்பம்......

சலங்கைகளின் ஓசை போலவும், சுழல்களின் ஒலிப்பு போலவும், உடுக்கையின் சீற்றம் போலும் ஒலி அலையல்கள் சிதறின. சீறின. பொங்கிப் பிரவகித்து வெறியுடன் சுழன்று வரும் நதியின் புதுவெள்ளத்துப் பேரொலி போல துள்ளித் துள்ளிச் சீறிச் சாடுகின்ற கடலலைகளின் முழக்கம் போல. மலையுச்சியிலிருந்து கொதித்துக் குதிக்கின்ற அருவியின் பேயொலி போல ஓசைகள் குழம்பின. அணுக்கள், சராசரங்கள், விண்மீன்கள். அண்டங்கள், அவற்றுக்கு அப்பால், அப்பாலுக்கும் அப்பால் எப்பாலுமுள்ள

எல்லாம் பேயாட்டம் ஆடிச் சுழல்வன போல் தோன்றின, பித்தன் சிரித்தான், பேய்ச் சிரிப்பு சிரித்து ஆனந்த நடமிடுவது போல் தோன்றியது!

ஊனக்கண் பெற்ற மனித ஜந்துவின் கண்கள் செயலற்றுப் போயின, செவிகள் ரீங்காரமிட்டன. தலை சுழல்வது போலிருந்தது. சுழன்றது! உலகமே பம்பரம் போல் ஆடுவதாகத் தோன்றியது கிருஷ்ண பிள்ளைக்கு; தானே ஆடி, திண்டாடி கீழே விழுந்தார்.

அவ்வளவு தான் தெரியும் அவருக்கு!



# 12

## சிரிப்பின் எதிரொலி

கிருஷ்ண பிள்ளை கண்களைத் திறந்த போது வானத்தில் ஒளி சிரித்தது. எங்கும் எழில் சிரித்தது. பின் கீழ் திசையில் சிரித்தது செங்கதிர். பொன்மயமாய் சிரித்தது உலகு.

மரங்கள் மென்மையாய் சிரிப்பது போல் சலசலத்தன உலகின் சிரிப்பு போல் காற்று கிளுகிளுத்தது. எங்கும் சிரிப்பு. சிரிப்பின் எதிரொலி.

எழுந்த கிருஷ்ண பிள்ளையின் உள்ளம் சிரித்தது. 'நம்ம அண்ணனுக எங்கே போனானுக தெரியலியே! பித்தன்கிறது சரியாயிருக்கே! என்ன குதிகுதித்தான்! என்ன சிரிப்பு!' அவர் மனம் சிரித்தது.

எதிரே பார்த்தார். வான் நோக்கி நெடிது வளர்ந்த கோபுரம் கொண்ட கோவிலின் கர்ப்பக்கிரகம் தெரிந்தது அங்கு காரிருள் சிரித்தது. இருளோடு இருளாய் சிலைகள் நின்றன. ஆடாது ஒளிர்ந்த அணையா விளக்கின் சுடர் சிரித்தது. அவர் கண்டார். கண்டு விட்டார் கடவுளர்கள் முடிவை. அங்கே கடவுளர்கள் கல்லாக நின்றார்கள்.

'ஒரு நாள் அனுபவத்தின் வேதனையைச் சகிக்க உங்கள் இதயத்தைக் கல்லாக்கி விட்ட கடவுளர்களே! வாழ்க்கையை சகித்துக் கொள்ள மனிதன் தன் மனதை இரும்பாக்கிக் கொள்ள வேண்டுமோ?' என்று புதிர் போட்டுவிட்டுச் சிரித்தது அவர் அறிவு.

பக்கத்து ஹோட்டலில் தோசைக்கல் சிரித்தது, சுர் சுரீர் என்று! காப்பி மணம் கமகமத்தது. பிள்ளையின் கடமையை நினைவுறுத்தியது!

'ஸரி, இனி நம் காரியத்தை கவனிகக வ்வணடியது தான், முதல்லே கண் எரிச்சல் தீருவான் வேண்டி யாம்

ஆற்றிலே போய் விழவேண்டும்' என்று தீர்மானித்தார் அவர், 'அப்படியே போய்விட அல்ல! பின் வந்து ஹோட்டல் பதார்த்தங்களுக்கு அருள் புரியவேண்டும்' என்று அனுபந்தம் இணைத்தது மனம்.

அவர் சிரித்தார், அதன் பின்னணி போல் சிரித்தது விம்மி விம்மிச் சிரித்தது - கோயிலின் கண்டா மணி.

'சிரி! திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுள் போல சிரித்துச் சிரித்தே வாழ்க்கையின் இனிமையை நுகர்க!' என்று சிரித்தது அவரது இதயம்.

மிலிடரி லாரி கோரமாகச் சிரித்தபடி ஓடி வந்தது. 'என்னைப் பறிவாங்கப் பார்க்கிருயாடா எமனே!' என்று எண்ணித் தாவி விலகினுர் கிருஷ்ண பிள்ளை. காரணமில்லாமலே அவருக்கு சிரிக்கவேண்டும் போல் தோன்றியது.

அவர் சிரித்தார்! சிரித்துக்கொண்டேயிருந்தார்!

கடவுள் நினைப்பு எழுந்ததும் கடவுளின் சக்திகளாய் திகழ்ந்த தேவியரைப் பற்றி எண்ணுமலிருக்க இயல வில்லை கிருஷ்ண பிள்ளையால்! தேவலோகத்திலே பொம்மைக்கொலு போல் ஓடிவந்து வரிசையாக நின்ற அம்பிகைமார்கள் என்ன நினைத்தார்களோ! என்ன செய்வார்களோ? அவர்கள் ஓடி வந்த நிலையை எண்ணும் போதே அவருக்குச் சிரிப்பு வந்தது.

தேவியர் பூலோக விஜயம் செய்யாமல் போய்விட்டார்களே என்ற வருத்தமும் அவருக்கு ஏற்பட்டது. ஆனல், அவர்கள் வந்திருந்தால் வீண் தொல்லையாக அல்லவா போயிருக்கும்! அந்த நாடக மேடையில் கண்ட காட்சிகள் சுடுசட்டியில் போட்ட கடுகு மாதிரி வெடிக்க வைத்துவிட்டதே! அம்பிகையை என்னபாடு படுத்தாது! எரிமலையாக மாறியிருப்பாள், அவ்வளவு தானு? போட்டி நாடகமே ஆடி கும்பலைத் தங்கள் பக்கம் இழுத்திருப்பாளே.

சக்தி அம்சங்கள் எனப் போற்றப்படுகிற பெண்களின் பண்பை, போக்கை, நிலைமையைக் கண்டு தேவியர்

மகிழவா போகிறார்கள்! ஒருவேளை நவயுவதிகள் மாதிரி தாங்களும் மினுக்கித் திரியும் உரிமை கேட்டுவிட்டால்?... சினிமா நட்சத்திரங்களை அவர்கள் பார்க்க வேண்டும். அவசியம்! அப்பொழுது தேவலோகத்தில் அனர்த்தம் தலை காட்டினாலும் காட்டலாம்!

கிருஷ்ண பிள்ளையின் சிரித்த உள்ளம் எதிலோ போய் முட்டியது. ஏன் இந்த நிலை? ஏன் இந்தச் சிரிப் பாணிப் பிழைப்பு

'சரியாகச் சொன்னான் அவன். எவனோ ஒரு தமிழன் தான். தமிழனின் அறிவைப் பாராட்டவேண்டியது தான். அவன் சொன்னானே...

எவனோ ஒருவன் சொன்ன அழகுக் காட்சியை நேரே கவனிப்பது போல் பிரமித்து நின்றுவிட்டார்......

கடல். எல்லையற்ற மாகடல். சிதறிச்சிதறி எழுந்து குழம்பி மீண்டும் சிதறி அமைதியின்றி அலைபுரளும் காலக் கடல். அதன் பொன் வண்ண மணற்கரையிலே ஒரு சிறு விளையாட்டு, பேதையும் பித்தனும் விளையாடுகிற விளையாட்டு!

அவன் ஆடுகிறான். தன்னை மறந்து ஆடுகிறான். கரு நாக நெளிவுகள் போல சடை மின்னிப் புரண்டு அசைந்து ஆட, அணிந்துள்ள சர்ப்ப ஆபரணங்கள் சீறி ஆட' கழல் கள் கலின் கலீனென இசைந்தாட, ஓர் கையில் மழு தீ நாக்குகள் நீட்டிச் சிவந்தாட, நெற்றிக் கண்ணிலே சிறு பொறி சிரித்தாட, கண்களில் தனி ஒளிமிளிர்ந்து ஆட அரைக் கிசைத்த புலியாடை ஆட அவன் ஆடுகிறான்.

அவன மட்டும தானா ஆடினான! அணடஙகள ஆடின, விண்ணும் மண்ணும் நீரும் வெளியும் எல்லாம் குடியர் கள் போல் ஆடின!

'என்ன ஆட்டமோ! இதைப் போன்ற கோரமான. பைத்தியக்காரத்தனமான ஆட்டத்தை தமிழ் சினிமாப் படத்திலே கூடப் பார்க்க முடியாது போலிருக்கே' என்று

நினைப்பு பாதையை விட்டு விலகவும் சிரித்தார் கிருஷ்ண பிள்ளை......

......அவளோ? காலமெனும் கடற்கரையிலே அமர்ந்து சிற்றில் கட்டி கட்டி மகிழ்ந்திருக்கிறாளாம். உயிர்களை மண்களாக்கிக் குவித்துக் குவித்து வீடு கட்டுகிறாளாம்!....

'உயிர்களை மண்ணுகக் கருதப் போய் தான் மனிதர் கள் மண்ணுந்தைகள் மாதிரிப்போய்விடுகிறார்கள். வாழ்கையும் மண்போலே தான் இருக்கு. அவள் மூளையைப் பாருங்கடா!' என்று கெக்கலித்தது தறுதலைத்தனமாக அவர் இதயம்!

...வீடு கட்டினாள். இடிந்தது. சிதைந்த வீட்டைச் செப்பனிட்டு மீண்டும் மீண்டும் கட்டினாள். சிறுபிள்ளைத் தனமான இந்த விளையாட்டைக் கண்ட பித்தன் சிரித்தான். கொதிக்கும் எண்ணெய் நுரை கொப்புளிப்பது போல் அவனுக்குச் சிரிப்பு பொங்கியது. அமைதியான நீரில் பாறாங்கல்லை உருட்டிவிட்டால், அடியிலிருந்து சிரித்துப் பொங்கி மேல் மட்டத்துக்கு வந்து வெடிக்கிற குமிழிகளைப் போல் சிரிப்பு ஒலி மலர்ந்து சிதறியது.

பாய்ந்தான். மின்னல் போல் சாடி சின்னஞ் சிறு மணல் வீட்டைச் சிதைத்தான். சிரித்தான்.

பேதை அழவில்லை. அவளும் சிரித்தாள். மீண்டும் கட்டினாள். சிதைத்தான். கட்ட, சிதைக்க, சிதைக்கக் கட்ட, கட்டவும் சிதைக்கவும்......

யுகம் யுகமாக இந்த சிரிப்பாணிப் பிழைப்பு நடை பெறுகிறதாம்!

'அப்புறம் எப்படி ஐயா உலகம் உருப்படும்! சிருஷ் டித் தொழிலை கவனிக்கும் கடவுளும் சக்தியுமே உலகை விளையாட்டாக நினைத்து நடத்தினால்! அது தான் உலகம் பைத்தியக்காரத் தனமாகவும் முட்டாள் தனம் நிறைந்த தாகவும் காணப்படுகிறது. அந்த லட்சணத்தைப் பார்க்க வந்தும் கூட முழுதும் பாராமல் டபாய்த்து விட்டார் களே!'

அவருக்கு சிரிப்பு பொங்கி எழுந்தது. 'இத்தகைய கடவுள்களுக்கு கோயிலின் கர்ப்பக்கிருகக் காரிருள் தான் சரி! இவர்கள் மனித உயிர்களை வைத்து விளையாடுகிறார்களாமே. அதுக்கும் பழிவாங்கிவிடுகிறான் மனிதன் சரியானபடி, அது தான் நாடக மேடைகளிலும் தமிழ் சினிமாக்களிலும் கடவுள்களை வைத்து விளையாடுவதன் மூலம். மனிதனின் மூளை வாழ்க!'

கிருஷ்ண பிள்ளை சிரித்தார். வாய்விட்டுக் கலகலவெனச் சிரித்தார். 'எவனோ பைத்தியக்காரன்!' என்று பயந்து போன பெண் ஒருத்தி கைதவறி நழுவவிட்ட குடம் ஆற்றின் படிக்கட்டுகளில் படிப்படியாக உருண்டு விழுந்தது. அதன் டண்...டண்...டனார் கீதம் சிரிப்பின் எதிரொலி போல் ஒலித்தது. அதைப் பதிவு செய்து ஒலி பரப்புவது போல் சலசலத்து ஓடியது ஆற்று வெள்ளம்.



‘சாந்தி நிலைய’ப் பிரசுரம்
அடுத்தது

# ‘கோயில்களை மூடுங்கள்’

கோரநாதன் எழுதியது

அறியாமை அந்தகாரத்துக்கும், புரோகிதப் புல்லுருவித்தனத்துக்கும் சுரண்டும் செயலுக்கும் சமாதிகட்ட கோயில்களுக்கே ‘கோவிந்தா கோவிந்து’ கூவி — அரோகராப் போட்டு — இழுத்து மூடும்படி எக்காளமிடுகிறார் கோரநாதன்.

அறிவுக் கதிர் ஒளி சிதறும் புது யுகக் கருத்துகளில் ஒன்று தான் ‘கோயில்களை மூடுங்கள்’ என்பது. ஏன் மூடவேண்டும், என்னென்ன செய்யவேண்டும்? — இவை போன்ற பிரச்னைகளை இச் சிறு நூல் கூறும்.

எதிர்பாருங்கள்
விரைவில் வெளிவரும்

அவள் ஒரு தாசி.

சமூகம் தன் காமப் பசியை தீர்த்துக்கொள் வதற்காக சிருஷ்டித்து விட்ட ஜந்து.

அந்த வாழ்வை அவள் விரும்பவில்லை. திரு மணம் வேண்டுமெனத் தவித்தாள்.

'கறைபட்ட' அம் மலரை மணந்த மணவாளனி டம் அவள் உள்ளத் திருப்தி பெறவில்லை. ஏன்? வாழ்வின் மறுமலர்ச்சி அவளை எப்படிப் பாதித் தது?

மீண்டும் அவள் 'பூர்வாசிரமம்' நாடியது ஏன்?

அது எதன் பிசகு? இன்றைய திருமண சம் பிரதாயக் குடும்ப வாழ்வின் கோளாறுதானு?

இதைப் போன்ற புதிர்களின் விடைதான்

# தேவகி

(நாவல்)

ஆசிரியர் : வல்லிக்கண்ணன்

இது சாந்தி நிலைய வெளியீடு மூன்று

பிரசுரமாகும் தேதி ?

# சாந்தி நிலையம்

லட்சியவாதிகளின் பல வருஷத்திய இன்பக் கனவின் உயிர்ப்பு இந் நிலையம். 'எங்கள் வாழ்வும் எங்கள் வளமும் மங்காத தமிழ்' என்பதே இந் நிலையத்தாரின் இதய ஒலி. வளரும் தமிழுக்கு எது தேவை என உணர்ந்து துறை தோறும் புதுப்புது இலக்கிய முயற்சிகளை உருவாக்குவதே இதன் நோக்கம்.

விருப்பு வெறுப்பற்ற விமர்சகர்கள், சிறந்த ரசிகர்கள், நேர்மையும் துணிவும் கொண்ட இலக்கிய பிரம்மாக்கள் சாந்தி நிலையத்தின் நிர்வாகிகளும் ஆலோசகர்களுமாக உள்ளனர். தமிழுக்குப் புதிதான இலக்கிய சிருஷ்டிகளையும் சிந்தனைச் செல்வங்களையும் பரிட்சார்த்தமாக வெளியிட்டு அறிவுக்கும் கலைக்கும் தாய்மொழிக்கும் சேவை புரிவதே எங்கள் லட்சியம். இதர பிரசுராலயங்கள் அச்சிடத் துணியாத இலக்கிய சோதனைகள் பலவற்றையும் சாந்தி நிலையப் பிரசுரங்களாகப் பெற்று தமிழ்நாடு இன்புறும் காலம் விரைவிலே வரும்.

காகிதக் கட்டுப்பாடு தடங்கலாக இருப்பதால் எண்ணியதை எண்ணியபடி இயற்ற முடியவில்லை இப்பொழுது. எனினும் வருங்காலம் எங்களுடையது என்ற நம்பிக்கை எங்களுக்கு உண்டு. அந்தப் பொன் யுகத்தை நோக்கி லட்சியப் பாதையில் தலைநிமிர்ந்து செல்லும் கலைஞர்கள் நாங்கள்.

எங்கள் திட்டம் மகத்தானது. உழைப்புக்கும் திறமைக்கும் உரிய மதிப்பு கொடுப்பது. நாங்கள் வாழப் பிறந்தோம், வாழ்வோம் என்ற தன்னம்பிக்கை கொண்ட லட்சியவாதிகளின் ஆசைக் கனவு, நாங்கள் வாழ்வதுடன் திறமையாளர்களையும் உழைப்பாளிகளையும் வாழவைப்பதும். கலையை இலக்கியத்தை வளமுறுத்துவதும் எங்கள் பணி. காலம் துணைபுரியுமாக!

SPACE DONATED BY

NAIYANDI BHARATHI

TO

# T. K. S. BROTHERS

PROPRIETORS

Madura Sri Bala Shanmugananda Sabha

IN APPRECIATION OF THEIR MERITORIOUS SERVICE TO THE DRAMATIC ART AND LITERATURE :: :: ::